# அன்புச் செல்வனே!

இமாம் கஸ்ஸாலி (ரஹ்)

தமிழாக்கம் :

மௌலவி, O. M. ஜெயினுத்தீன்,

ஆசிரியர் : M. M. H. A. காலேஜ்
நீடூர்

யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்

155-156, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை-1.

# முன்னுரை.........

அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருப்பெயரால்.........

புகழனைத்தும் அகிலத்தவரைப் பரிபாலிக்கின்ற அல்லாஹ்வுக்கே உரித்து. இறுதி நற்பாக்கியம் பக்திமான்களுக்கே உண்டாகுக! கருணையும், சாந்தியும் இறைதூதர் முஹம்மது (ஸல்) அவர்கள்மீதும், அவர்களது உற்ருர் உறவினர்மீதும், மற்றவர்கள் மீதும் சாரட்டும்!

முற்கால மாணவர்களில் ஒருவர் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கட்குப் பணிவிடை புரிவதில் பலகாலம் ஈடுபட்டிருந்தார். தமக்கு உண்டாகும் ஐயங்களை அவ்வப்பொழுது இமாம் அவர்களிடம் எடுத்துரைத்துத் தகுந்த விளக்கம் பெற்று வந்தார். இவ்வாறு அறிவின் தத்துவார்த்தமனைத்தையும் திரட்டி, ஆத்மார்த்த மேன்மைக் குணங்களில் பரிபக்குவமடைந்திருந்தார்.

ஒரு நாள் அவர் தமக்குள்ளே......"நான் பற்பல அறிவுகளைப் பயின்றுவிட்டேன். கலா ஞானத்தைக் கற்றிடவென்றே எனது பொன்ஞன வாழ்நாளையெல்லாம் செலவிட்டுவிட்டேன். ஆயினும் இன்று எவ்வகை அறிவு ஞானம் மறுமையில் எனக்குதவும்? மண்ணறையில் என்ஞேடு எனக்கு மகிழ்வளிக்கும்? அதன்படி யான் ஒழுகிடப் பயன் தராதது எது? அதை நான் உதறித்தள்ளிவிடுவதற்கு என்றெல்லாம் உணர்வது அவசியத்துலுமவசியமாயிற்றே? ஏனெனில் 'இறைவ! எனக்கு உபயோகமில்லாக் கல்வியறிவை விட்டும் உன்னிடம் தற்காப்புக் கோருகிறேன்' என்றுதானே பெருமாஞர் அவர்கள் கூடப் பிரார்த்தித்துள்ளார்கள்......" என்று சிந்தை குழம்பிப் புலம்பிக் கொண்டிருந்தார்.

இந்தச் சிந்தனை அம்மாணவர் இதயத்தைத் துளைத்துக்கொண்டே இருந்தது. சில காலங்களுக்குப் பின்னர் சில விஞக்களுக்கு விளக்கம் தேடி

ஹஸரத் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கட்கு ஒரு மடல் எழுதினார்.

அம்மடலில்......

நான் கேட்டுள்ள வினாக்களுக்கு விடையளிப்பதோடு உபன்யாசம் ஒன்றும், எல்லா வேளைகளிலும் ஓதிக்கொண்டிருக்க துஆ ஒன்றும் எழுதி அனுப்பவும். குருமகான் அவர்கள் இயற்றிய 'இஹ்யா' போன்ற நூல்கள் எனது வினாக்களுக்குத் தக்க விடைகளைப் பெற்றிருந்த போதினும், தாங்கள் எனக்குத் தேவையானவற்றைச் சில தாள்களில் வரைந்து தர வேண்டும். அது என் வாழ் நாள் பூராவும் என்னோடு இருக்கும். இறைவன் நாடினால் அவற்றிலுள்ள பிரகாரமே வாழ்நாளெல்லாம் ஒழுக வேண்டும் என்பதே எனது குறிக்கோள்......!'' என்று குறிப்பிட்டிருந்தார்.

அதற்கு விடையாக இமாம் கஸ்ஸாலி (ரஹ்) எழுதியனுப்பிய சிறிய நூல்தான் இது.

ஒவ்வொரு விஷயத்தை விளக்கும்பொழுதும் 'அன்புச் செல்வனே' என்று அழைத்தே மறு மொழி பகருகின்றார்கள். இதில் வியப்பொன்றுமில்லை. காரணம், இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களிடம் ஞானமடை திறந்து கரை புரண்டோடியது; மேலும் அன்று வாழ்ந்தவர்களுள் பலரும் மெய்ஞ்ஞானப் பாதையில் பச்சிளஞ்சிறார்களாகவே தென்பட்டனர். எனவே அவ்வாறு அழைத்தார்கள்.

இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் அரபி மொழியில் தமக்கே உரிய தனிப்பாணியில் அரும் பெரும் கருத்துக் கருவூலங்களை அள்ளிப்படைத்திருக்கிறார்கள். அவற்றின் பொருள் தேக்கமும், கருத்துச் செறிவும் கடுகளவும் சறுகாது மிகக் கவனமாகத் தமிழில் தருகிறேன். இதனைத் தமிழ் மக்கள் யாவரும் படித்து நற்பயனடைந்திட ஏக வல்லோன் நல்லருள் பாலிப்பானாக!

இத்துடன் ''அபூஹுறைறா!'' என்ற பகுதியும் சேர்க்கப்பட்டுள்ளது.

—மௌலவி, O. M. ஜெயினுத்தீன்.

# அன்புச் செல்வனே!

1. மகனே !

இறைவன் தனது வழிபாட்டுக்கென்றே உனக்கு நீண்ட வாழ்வளித்து, அவனது நேசர்களது வழியில் உன்னையும் சேர்த்தருள்வானாக! உபன்யாச உரையென்பது தூதுத்துவப் பீடிகையான பெருமானார் அவர்களிடமிருந்தே எழுத்துருவாக்கப்பட்டது என்பது சர்வ நிச்சயமாகும். அதிலிருந்து ஒரு நல்லுரை உமக்குக் கிடைத்திருந்தால் என்னிடம் உபதேசம் கேட்கவேண்டிய அவசியம் என்ன! அது உமக்குக் கிட்டி இராவிட்டாலோ, கழிந்த ஆண்டுகளில் கலையுலகில் நீ கிரகித்தெடுத்ததுதான் என்ன எனச் சொல்லிவிடு!

2. மகனே !

"இறைவன் மனிதனை வெறுத்ததற்குக் காரணம் அவன் தனக்குத் தேவையில்லா விஷயத்தில் ஈடுபட்டதுதான். மனிதனின் வாழநாளில் ஒரு வினாடியாவது வீணில் செலவானால், அவனுக்கு ஆயாசமும் அமைதியின்மையும் நீண்டிட, தானே பொறுப்பாளியாகின்றான். எவர் நாற்பது வயதை எட்டியும, அவரிடத்தில் தீமையை

விட நன்மை அதிகப்படாதிருந்தால் அவர் நரகத்துக்குத் தயாராகட்டும் என்பது நபிகளின் பொன்மொழி. தங்கள் சமூகத்தவர்களுக்கு அருளிய பேருரைகளில் ஒன்றுகும் இது. இந்த நல்லுரை அறிவாளிகளுக்குப் போதுமல்லவா?

3. மகனே !

நல்லுரை பகருவது மிகச் சுலபம். ஆயின் நீ அதை ஏற்று அதன்படி ஒழுகுவதுதான் சிரமம். ஏனென்று கேள்! நல்லுரையென்பது மனம்போன போக்கெல்லாம் செல்லுவோருக்கு மிகக் கசக்கும். அவர்களது இதயங்களுக்கு மார்க்கத்தில் தடுக்கப்பட்டவைகளே தித்திக்கும். உலகாயதக் கல்வியைத் தேடி இவ்வுலகில் உயர் பதவிகள் வகித்திட மனுேபாவங் கொண்டவருக்கு இந் நிலை மிகக் கண்டிப்பாய் ஏற்படும். ஏனென்றுல், கற்கின்ற இவ் வெற்றுக் கலை இவ்வுலகில் வெற்றி பெற்றிடச் சாதனமாகும்; அதற்கேற்ப நற்கிரியை புரிந்திட அவசியமே இல்லை என்றெண்ணிவிடுகின்றுர். இது தத்துவ ஞானிகளின் நம்பிக்கை,

அந்தோ! இவ்வறிவீனர், தாம்கல்வி பயின்றபொழுது அதற்கேற்ப ஒழுகாவிட்டால் நிச்சயம் அது தமக்குப் பாதகமாகவே போய் முடியுமெனப் புரிந்துகொள்ளவில்லை. ''கற்றபின் அதற்குத் தக நில்லா ஓர் அறிஞர்தாம் மறுமையில் கடின தண்டனைக்குள்ளாவார்!'' என்று பெருமானுர்கூட இதற்குச் சான்று பகர்ந்துள்ளார்கள்.

இப்படிக்கூட அறிவிக்கப்படுகிறது:

'ஜுனைது (ரஹ்) அவர்கள் மரணித்தபின் அவர்களை ஒருவா கனவில் கண்டார். 'ஜுனைது அவர்களே, காரியம் என்னவாயிற்று?' என வினவப்பட்டது. ''கற்ற வாசகங்கள் காற்றில பறந்தன; பயின்ற பலப்பல புதிரான

அறிவுக் கருவூலங்கள் பஞ்சு பஞ்சாயின; ஆயின் இரா வேளையில் விழித்து நின்று வணங்கிய சில 'ரக்அத்'கள் தாம் எனக்குப் பயனீந்தன." என்று ஜுனைது விடை பகன் ருர்கள்..."

4. மகனே !

நற்கிரியைகளை விட்டுப் பஞ்சையாகி விடாதே ! நல்ல நிலைகளில் ஓய் வெடுத்து விடாதே ! செயலில்லா வெற் றறிவு உன் கரம் பற்றிக் காப்பாற்ருது என்பதற்கு உதார ணம் ஒன்று தருகிறேன் நம்பு ! வனத்தில் செல்லுகின்ற ஒரு மனிதனிடம் இந்திய நாட்டுப் பெயர்போன கூரிய வாட்கள் பத்து இருப்பதோடு மற்றுஞ்சில படை அங்கி களுமிருக்கின்றன. அம்மனிதன் களம் பல சந்தித்த போர் வீரனுங்கூட. அவனை நோக்கிப் பயங்கர சிங்கமொன்று பாய்ந்து வருகிறது. இப்பொழுது நீ சொல்! இவனிட முள்ள ஆயுதங்களை இவன் கரமேந்தி உபயோகித்தா லன்றி அந்த ஆயுதங்கள் மட்டும் தனியாய் நின்று இவ னது இடர் களைந்து விடுமா? வாளைக் கரம்பற்றி வீசினுல் தானே அது தன் வேலையைச் செய்யும்! புரிகின்றதா? அதே போன்றுதான் ஒரு மனிதன் அறிவியல் துறையில் ஒரு இலட்சம் விஷயங்களைப் பயின்று அவற்றை நன் கறிந்து, அதன்படி நின்று ஒழுகாவிட்டால், அக்கல்வி இவனுக்குப் பயனளிக்கவேமாட்டாது.

இன்னுமோர் உதாரணம் கேள் ! ஒருமனிதனின் உட லில் வெப்பமும் பித்தவியாதியும் இருக்கின்றன. அவற் றிற்கேற்ற மருந்தை உபயோகித்தால் தானே அவ் வியாதிகள் சொஸ்தமடையும்! இல்லையேல் சிரமமல்லவா?

5. மகனே!

நூறு ஆண்டுகள் நீ கல்வி பயின்று, ஆயிரம் நூல் களைத் திரட்டினபோதிலும் அதற்குத் தகுந்த முறையில்

நீ செயல்பட்டாலன்றி இறை கருணைக்கு அரு கதையாகிவிட முடியாது. இறைவனது வசனங்களைக் கவனி! ஓர் இடத்தில்...

"மனிதன் தான் பிரயாசைப் படுகின்ற அளவே தவிர வேறொன்றும் அடையப் பெருன்" என்றும், மற்றோரிடத்தில்...

"தனது இறைவனைத் தரிசிக்க நாடுபவன் நற்கிரியைகள் புரிந்து கொள்ளட்டும்!" எனவும், வேறோர் இடத்தில்...

"நல்லதைச் செயல்படுத்தியதற்குக் கூலியாக (மேம் பதவி கிட்டும்)......." என்பதாயும், பிறிதோரிடத்தில்...

"ஈமான்—நம்பிக்கை கொண்டு நல்ல பல கிரியைகள் புரிந்தவர்கட்கு 'பிர்தவ்ஸ்' என்னும் மேஞ்சுவனம் தங்குமிடமாகக் கிட்டும்..." என்றும் அடுத்த விடத்தில்...

"அவர்கட்குப்பின் ஒரு கூட்டம் வந்தது; தொழுகையைப் பாழ்படுத்தினர்; மன இச்சைக்குள்ளாயினர். இவர்கள் 'கய்யி' என்ற நரகக் குழியையே அடைவர், பாபப் பரிகாரம் தேடி நற்செயல் புரிந்தவர்களைத் தவிர. நற்செயல் புரிந்தவர்களோ சுவனம் புகுவர். அணுத்துணையும் அநீதம் இழைக்கப்படார்..." என்றெல்லாம் இறைவன் பணித்துள்ளான்.

6. மகனே!

அடியிற்காணும் நபிமணி வாசகம் பற்றி உனது கருத்தென்ன?

"இஸ்லாம் ஐந்து காரியத்தின்மீது அமைந்திருக்கிறது. 1. இறைவன் ஒருவனைத் தவிர மற்றக் கடவுள்கள் இல்லை என்றும், முஹம்மத் (ஸல்) அவனின் தூதர் என்றும் உறுதி பகருவது. 2. இறை வணக்கத்தை நிலைப்

படுத்துவது. 3. ஜகாத் ஏழை வரி கொடுப்பது, 4. ரமலான் மாத நோன்பிருப்பது. 5. போகவரச் செலவுக்கு வசதிப் பட்டோர் ஹஜ்ஜுச் செய்வது...''

ஈமான் என்பது நாவால் மொழிந்து உள்ளத்தால் நிர்ணயிப்பதும், அத்தியாவசியக் கடமைகளை ஆற்றுவது மாகும்.

நற்கிரியைகள் பற்றி ஆதாரங்கள் மிகவிருக்கின்றன; மட்டிடவியலாது. ஒரு மனிதன் இறையருளால் மட்டும் சுவனத்தை அடைகின்ருன் என்று வைத்துக்கொண்டால் கூட, அவன் இறை வழிபாட்டுக்கு ஆயத்தமான பிறகு தான் அவ்வாருகவியலும். காரணம், அல்லாஹ்வின் கருணை நல்லவர்கட்கே மிக நெருங்கினதாகும்.

இப்படி ஒரு வினவிடுக்கலாம்.

''ஈமான் கொண்டால் மட்டும் ஒரு மனிதன் சுவனம் பிரவேசிக்கலாமல்லவா?''

விளக்குகிறேன் கேள்! ஆமாம்! மெய்தான்! ஆனல் அவன் எப்பொழுது சுவனம் புகுவது? அவன் தனது இலட்சியத்தை அடைவதற்குள் அவனின் எதிரே காட்சி தரும் பள்ளத்தாக்குகள் எத்தனையோவிருக்கின் றன! இடைக்காலத்தில் ஈமான்—நம்பிக்கை பறிபட்டு விடுமோ என்னவோ என்ற அச்சமே முதற் கிடங்காகும். அப்படி இவன் சுவனம் பிரவேசித்தால்கூட சுவனத்தில் ஒரு மூலையில்தான் தங்கக்கூடும்!

ஹஸன் பஸரீ (ரஹ்) கூறினர்கள்:

''இறைவன் மறுமையில் மக்களை நோக்கி 'எனது கருணையைக் கொண்டு சுவனம் புகுங்கள்! உங்களது நற் கிரியைகளுக்கு ஏற்றவாறு அதில் பங்குபெறுங்கள்' என்று அல்லாஹ் சொல்லுவான்...''

7. மகனே!

நீ நற்செயல் செய்யாதவரை நற்கூலி பெற்றிடவியலாது. இப்படி ஒரு நிகழ்ச்சியுண்டு. அது பனீ இஸ்ரவேலர்களில் ஒருவர் எழுபதாண்டுகள் இறைவனை வணங்கினார். தன்னை அமரர்களோடு இணைத்துக்கொள்ள வேண்டுமென இறைவனிடம் முறையிட்டார். அப்பொழுது இறைவன் ஒரு வானவரை அனுப்பிவைத்தான். இவரிடம் வந்த அவ் வானவர், "நீர் புரிகின்ற இவ் வணக்கத்தால் சுவனம் புகக்கூட உம்க்குத் தகுதி இல்லை.'' என்று கூறினார்.

வானவரை ஏறிட்டுப் பார்த்தார் ஏங்கிய வதனத்தோடு அம் மனிதர்.

"நாம் வணங்கிடவென்று சிருஷ்டிக்கப்பட்டவர்கள் தாமே; வணங்குவதே நமது கடன்...'' என்று இதமான குரலில் சமாதானம் பண்ணிக்கொண்டார். இதைச் செவியுற்ற அவ் வானவர் இறைவனிடம் சென்று, "ஐயனே! அம் மனிதர் சொன்னவற்றை நன்கறிந்தவன் நீ!'' என்று சொன்னார்.

இது கேட்ட இறைவன்:

"அவர் நமது வணக்கத்தைப் புறக்கணிக்காவிட்டால், நாமும் அவரைஒதுக்கித் தள்ளமாட்டோம். நமக்குத் தயாள சிந்தையுண்டு. நாம் அவரது பாபங்களை மன்னித்து விட்டோம் என்பதற்கு வானவர்களே, நீங்கள் சாட்சி!'' என்று வரங் கொடுத்தான்.

பெருமானார் பகன்றார்கள்:

நீங்கள் (மறுமையில்) விசாரிக்கப்படுமுன்பு (இவ்வுலகிலேயே) உங்கள் ஆன்மாக்களை விசாரித்துக்கொள்ளுங்கள்!''

அலி (ரலி) அருளினார்கள்:

"பிரயாசை இல்லாமல் சுவனம் புகலாமெனக் கருது பவன் வீண் மனமாளிகை கட்டுபவனாவான். உழைத்துத் தான் சுவனம் செல்ல வியலும் என்றெண்ணுபவனே உண் மையாளன்...!"

ஹஸன் பஸரி (ரஹ்) விளக்கினார்கள்:

"நற்கிரியை புரியாது சுவனம் செல்ல விழைவது பெரும் பாபம். மெஞ்ஞானம் என்பது, நற்கிரியைக்குக் கூலி கிட்டுமோ, என்னவோ என்ற பதற்றத்தை விட்டு விடுவதேயன்றி. நற்செயலை விடுவதல்ல......!"

ஒரு சமயம் நபி மணி (ஸல்) போதித்தார்கள்:

"தனது ஆன்மாவிடம் விசாரணை நடத்திக்கொண்டு, மரணத்திற்குப் பின் உள்ள காரியத்திற்காக நற்பணியி லீடுபடுபவனே அறிவாளி. அல்லாமல் தனது மன இச் சைக்குக் கட்டுண்டு, வரை கடந்து சென்று கொண்டு இறைவனிடம் தனக்கு மேம்பதவி கிடைக்குமென்று கோட்டை கட்டுகின்ற இவன் சர்வ முட்டாள்......!"

8. மகனே!

அறிவு பெறவும், பல நூல்களைத் துருவி ஆய்ந் திடவும் எத்தனை இரவுகள் விழித்திருப்பாய்? தூக்கத்தை யெல்லாம் ஒதுக்கி வைத்திருப்பாய் அல்லவா? நான் ஒன் றும் சொல்லுவதற்கில்லை. ஆயின் அவ்வாறுழைத்ததன் மூலம் உனது எண்ணமோ, உலகாயதச் சாம்பாத்தியத்தி லும் உயர்பதவி வகிப்பதிலும், உறவினர்களிடம் படாடோப மடிப்பதிலும் விரும்பி உழன்றால் உனக்குக் கேடுகாலமே உண்டாகும். தவிர, உனது நோக்கம் பெருமானார் கொணர்ந்த மார்க்கத்திற்கு உயிரூட்டவேண்டும், உனது பண்புகளைச் சீரொழுகச் செய்யவேண்டும், தீமையை ஏவு கின்ற ஆன்மாவை அடக்கவேண்டும் என்றிருந்தாலோ உனக்கே சுகமும் சுபிட்சமும் உண்டாகக் கடவதாக!

"இறைவ! நினக்கல்லால் நடு நிசியில் விழிப்பதுவும் பாழன்றோ! நீயல்லால் பொருள் கிட்டாமைக்காகச் சிந்தும் நீர் வீணன்றோ!" என்று பாடியவர் மெய்யே உரைத்தார்.

9. மகனே !

நீ உன் விருப்பப்படி வாழ்ந்துவிடு! அண்மையில் மரணிக்கவிருக்கும் *சவம் நீ; நாடுபவரிடத்துப் பழகிவிடு! நீ அவரை விட்டுப் பிரியப்போகின்றாய். முடிந்த அளவு நற்கிரியைப் புரிந்துவிடு ! அதற்கேற்றவாறுதான் கூலி வழங்கப்படுவாய்.

10. மகனே !

தர்க்க சாஸ்திரம், மருத்துவ சாஸ்திரம், வான சாஸ்திரம், பாவியல் கலை, அணி இலக்கணம் இலக்கண இலக்கியம் போன்றவற்றைப் பயின்ற காரணத்தால் உன் வாழ்வைப் பாழ்பண்ணினாயே தவிர நீ அடைந்ததென்ன ?

இன்ஜீலில்—முந்திய பைபிளில் கண்ணுற்றிருக்கிறேன்:

மரணமான உடலத்தைச் சவப்பெட்டியுள் வைக்கும் அந்தக் கணத்திலிருந்து மண்ணறைக்குக் கொண்டு சேர்க்கும்வரை, இறைவன் நாற்பது வினாக்கள் விடுக்கின்றான். முதல் வினா மட்டும் இங்குத் தரப்படுகிறது. "எனது அடியானே! பலஆண்டு காலம் மக்களிடம் உன் தோற்றத்தைத் தூய்மைப்படுத்தினாய். ஒருமணி நேரமாவது என்னைத் தூய்மைப்படுத்தியதுண்டா? ஒவ்வொரு தினமும் உன்னிதயத்தை நோக்கி, "எனதருளால் நீ நிரம்பியிருக்க, நானல்லாதவற்றோடு எவ்வாறு நடந்துகொள்

கிருய்? நீ என்ன செவிடா? காது கேளாதா?" என்று இறைவன் கேட்கின்ருன்.

11. மகனே !

செயலில்லாத அறிவு பைத்தியமாகும். கல்வியில்லாது நற்செயல் புரிவது சாலாது. இவ்வுலகில் உன் பாப பீடையை அகற்றிவிடாத, நல்வழியின் பக்கம் அழைத்துச்செல்லாத சகல•கலைகளாலும், மறுமை நாளில் "ஜஹன்னம்" என்னும் தீக்குண்டத்தை விட்டு அப்புறப் படுத்திவிட இயலா! முடியா!! என நன்கறிந்து கொள்!

நீ இன்றைக்காகவும் சென்றுபோன நாட்களுக்காகவும் நற்கருமங்கள் புரியாவிட்டால், நாளைக்கு மறுமையில் "இறைவா! எங்களை உலகின்பால் மீட்டிவிடு! நாங்கள் இதுவரை புரிந்துகொண்டிருந்த உதவாக்கரையான செயல்களை விட்டொழித்து நற்செயல்களைப் புரிகின்ரேம்..." என்று சொல்லுவாய். "அந்தோ அறிவீனு! நீதான் இங்கு வந்துவிட்டாயே! (தப்ப முடியாது!)" என்று உன்னை நோக்கி இழிவாய்க் கூறப்படும்.

12. மகனே !

நீ உன் 'ருஹு'க்கு ஊக்கமளித்திடு! 'நப்ஸு'க்கு தோல்வியை உண்டுபண்ணு! உடற்கட்டைக்கு மரணத்தைத் தீர்மானித்துவிடு! உனது உறைவிடம் மண்ணறை. அம் மண்ணறை வாசிகள். ஒவ்வொரு நிமிடமும் தம்மொடு நீயும் ஒருவனய் வந்து சேருவதென்றே? என உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். எச்சரிக்கை! மீண்டும் எச்சரிக்கிறேன்! தக்க சாதனமின்றி நீ அவர்களிடம் சென்றுவிடக்கூடாது.

அபூபக்ர் (ரலி) அறைகிறார்கள்:

"நமது இந்த ஸ்தூல உடலை பறவையின் கூட்டிற்கோ, கால்நடைகளின் கொட்டிலிற்கோ ஒப்பிடலாம்."

அப்படியாயின் அவ்விரு வகையில் எவ்வகையைச் சார்ந்தவன் நீ? நீ மேலுலகப் பறவையாக இருந்தால், வீணையின் நாதத்தைக் கேட்ட மாத்திரத்திலேயே சுவனத்தின் உயர் பீடங்களில் போய்த் தங்குவதற்கென்று விரைந்து பறந்து செல்!

நாயகத் திருமேனி கூட நவின்றுள்ளதைப் பார்,

" 'சயீத்பின் முஆத்' (ரலி) அவர்களது மரணத்திற்காக இறை சிம்மாசனம் கூடத் துடித்துத் துளும்பினது..."

"(நரகவாசிகளது இலட்சணங்கள் பற்றிக் கூறுகையில்) அவர்கள் மிருகங்கள் போல்; அல்ல, அதைவிட மிக வழி தவறியவர்கள்." என்று இறைவன் கூறுவது போல, நீ மிருக இனத்தைச் சார்ந்திருந்தாலோ,—அல்லாஹ் பாதுகாக்க!—இவ்வுலகை நீத்து நரக குண்டத்தின் பக்கம் செல்லக்கூடும் என்பதை விட்டு நிர்பயமாகி விடாதே!

'ஹஸனுல் பஸரி' அவர்கட்குக் குளிர்ந்த பானம் வழங்கப்பட்டது. பானக் கிண்ணத்தைக் கரத்திலெடுத்த பொழுது அவர்களுக்கு ஸ்மரணை ஏற்பட்டு, கரம்விட்டுக் கிண்ணம் நழுவி விழுந்தது. பின்னர் ஸ்மரணைலிருந்து தெளிவு பெற்றபொழுது "ஹஸன் அவர்களே! என்ன இப்படி?" என்று வினவப்பட்டது. அதுபொழுது "நரக்வாதிகள் ஏறிட்டுப் பார்த்து சுவனபதிகளிடம் 'இறைவன் உங்களுக்களித்த உணவுப் பதார்த்தத்தில் எங்களுக்கும் கொஞ்சம் தாருங்களேன்....!' என்று யாசிப்பார்கள். 'இறைவனை நிராகரித்தவர்கட்கு அப் பதார்த்தங்களைக் கொடுக்கக்கூடாதென இறைவன் தடுத்துள்ளான்...!'

என்று அந்தச் சுவனபதிகள் தட்டிக் கழித்துவிடும்பொழுது உண்டாகும் நரகவாதிகளது பரிதாபகர நிலை குறித்து என் சிந்தை ஓடிற்று'' என விடை பகன்றார்கள் அவர்கள்.

13. மகனே!

வெற்றறிவு மட்டும் உனக்குப் போதும்; நற்கருமம் புரியவேண்டியதில்லை என்று நீ கருதினால், உன்னை நோக்கி ''யாசிப்பவன் உண்டா? பயனில்லாமல் வாழ்வைப் பாழ்பண்ணிக்கொண்டு பாப மன்னிப்புக் கோருபவனும் உண்டா?'' என்று அவ் வெற்றறிவு அழைப்பு விடுகின்றது.

அறிவிக்கப்படுகிறது:—

''பெருமானாரின் சகாக்களில் ஒரு குழாம், 'அப்துல்லாஹ்பின் அப்பாஸ்' (ரலி) அவர்கள் பற்றி நபிகள் பெருமானிடம் புகழ்ந்து பேசினர். இராக் காலத்தில் தனித்து வணங்கினால் அவர் மிக நல்ல மனிதர் தான் என்று நபிகள் கோமான் சொன்னார்கள்...''

இறை தூதரவர்கள் தங்கள் நேசர்களுள் ஒருவரை நோக்கி ''நணபரே! இராக்காலத்தில் துயிலை மிதப்படுத்த வேண்டும். காரணம், இரவில் தூக்கத்தை அதிகப்படுத்துவது, அப்படிச் செய்தவரை மறுமையில் மிடிமை பிடித்தவராய்ச் சமைத்துவிடும்'' என்று பகன்றார்கள்.

14. மகனே!

இறைவனின் திரு வசனங்கள் மூன்று இங்குத் தரப்படுகின்றன. ஒன்று. ''உமக்கு இலாபம் அதிகமாவதற்காக இரவில் 'தஹஜ்ஜுத்' தொழுதுகொள்ளும்...!''—இது கட்டளையாகும். இரண்டு, ''பின்னிரவில் அவர்களே

பிழை பொறுக்கத் தேடுவர்...''—இது நன்றியுரையாகும். மூன்று, ''இரவில் மூன்று மணி நேரத்துக்கெல்லாம் பாப மன்னிப்புக் கோருவர்...!''—இது உற்சாக மூட்டுவதாகும்.

நபிமணி நவின்றூர்கள்:

''மூன்று ஓசைகளே அல்லாஹ் விரும்புகின்றூன். ஒன்று, (காலேயில் கூவுகின்ற) சேவலின் ஓசை. இரண்டு, திருமறை ஓதுகின்றவரின் சப்தம். மூன்று, பின்னிரவில் பிழை பொறுத்திட விழைகின்றவரின் ஒலி...''

'சுப்யானு-த்-தவ்ரி' செப்புகின்றூர்கள்:

''நிச்சயமாய் இறைவன் ஒரு காற்றைப் படைத்தான். அது பின்னிரவில் வீசும், இறை துதியின் ஜப ஓசைகளேயும் பாப மன்னிப்புத் தேடும் சப்தங்களேயும் சுமந்து, ஏக சக்ரவர்த்தியாம் இறைவன் பக்கம் செல்லுகிறது.''

''முன்னிரவு வேளே வந்ததும், இறை சிங்காதனத்தின் கீழிருந்து அழைப்பு விடுப்பவர், 'பொறுமையுடன் வணங்குபவர் இன்னும் எழவில்லேயா?' என்றழைக்கின்றூர். உடனே வணக்கசாலிகள் எழுகின்றனர்; நிரம்பத் தொழுகின்றனர். பிறகு நடுநிசியானதும் அவ்வாறே 'பக்திவான்கள் இன்னும் எழவில்லேயா...?' என்றழைக்கின்றூர். உடனே அவர்கள் துயிலெழுந்து இரவு மூன்று மணிவரை தொழுகின்றனர். பின்னிரவு வந்தபொழுது 'பாபம் கழன்றிட விழைபவர் இன்னும் எழவில்லேயா?' என்று கூவுகிறூர். துரிதமாய் எழுகின்றனர். பிழை கழன்றிட விழைகின்றனர். விடியற்காலே ஆகிவிட்டால், அசட்டையர்கள் இன்னும் கிளம்பவில்லேயா?' என்றியம்புகிறூர், அப்பொழுதுதான் தங்கள்பாயை விட்டு மனமில்லாது எழுகின்றனர் சோம்பேறிகள், மரணித்தவர்கள் மண்ணறையிலிருந்து எழும்புவது போல்...!'' என்றும் சுப்யானு-த்-தவ்ரி அவர்கள் விளக்குகிறூர்கள்.

15. மகனே !

'லுக்மான்' (அலை) அவர்கள் தமது புதல்வருக்குப் புகட்டிய பேருரைகளுள் இப்படிக் குறிப்பிட்டார்கள்:

"புதல்வா! உன்னைவிட ஒரு சேவல் புத்திசாலியாய் ஆகிவிடக்கூடாது! அது பின்னிரவு நேரங்களில் தூங்கிய வர்களைத் தட்டிக் கிளப்புகின்றது. நீயோ துயிலில் ஆழ்ந் திருக்கிறாய்!"

•

அரபிப்பண்ணிசைத்த பாவலர் ஒருவர் அடியிற் காணும் கருத்தை அழகுற வடிக்கிறார்:—

"இரவின் இருட் சுருளிலே மரக்கிளையொன்றில் அமர்ந்துகொண்டு புறு ஒன்று நீண்டநேரம் ரீங்காரம் செய் தது; நானோ துயிலில் ஆழ்ந்து கிடக்கின்றேன்.

இறையாலயத்தின் மீதாணையாய் நான் பொய்யுரைத்து விட்டேன், நான் மெய்க்காதலனாய் இருந்தால், காத லால் கசிந்து கண்ணீர் மல்கிட, அந்தப்புறு என்னைவிட முந்தியிருக்கமாட்டாதே...!

நான் எனது இரட்சகன் மீதுள்ள பிரேமையில் மூழ்கிக் கிடப்பதாய் கனவு காண்கின்றேன். ஆயினும் யான் அழ வில்லை; அந்தப் பறவை இனம் அழுகின்றது...!"

16. மகனே!

கட்டுப்பாடு, வணக்கம் என்றால் என்னவெனப் புரி வதே, நீ கற்ற அறிவின் சாரமாகும். கவனித்துக்கேள்! அடக்கம், வணக்கம் என்பது, மார்க்கத்தின் கட்டளைகளி லும், மார்க்கத்திற்காகாதவைகளிலும், பெருமானார் அவர் களை அப்படியே பின்பற்றி ஒழுகுவதாகும். அதாவது நீ சொல்லும்பொழுதும், அதற்கேற்ப நிற்கும்பொழுதும்,

கூடாத சொற்செயலே விடும் சமயமும், இவைபோன்ற வற்றைச் செய்யுந்தோறும் நபிமணியவர்களைப் பின்னொழுகு வதாய் ஆகின்றன.

உதாரணமாக:

பெருநாளன்றும், ஹஜ்ஜு மாதத்தில் பிறை 11, 12' 13, நாட்களில் நீ நோன்பு நோற்றாலும், அல்லது பிறரிடமிருந்து அபகரித்த ஆடையில் நீ தொழுதாலும் பாபியாவாய்! அச்செயல் தோற்றத்தில் வணக்கமாகத் தான் தென்படும். ஆனால் நீ பாபியாவது—குற்றவாளியா வது மட்டும் சர்வ நிச்சயம்.

17. மகனே!

உன் சொல்லும் செயலும் மார்க்கத்திற்கு நேர்பட் டிருக்கவேண்டும். காரணம், மார்க்கத்திற்கு ஒவ்வாத அறிவும் செயலும் வழிச் சறுகலாகும். வேடதாரிகளான ஞானவான்களின் செப்பிடு வித்தைகளைக் கண்டு ஏமாந்து விடாதே!

நான் வகுத்துத் தருகின்ற இவ்வழியில் நீ செல்ல வேண்டுமானால், அது, மனப் பயிற்சி என்னும் வாளால் மன இச்சையைத் துண்டிப்பது, காமத்தைக் கொல்லு வது போன்ற தக்க முறைகளால்தாம் சாத்தியமாகும். நளின நாவும், அசட்டை, காமம் போன்றவற்றால் நிரம்பி மிதக்கின்ற உள்ளமும் துரதிஷ்டத்தின் அறிகுறிகளாகும். என்பதைக் கவனித்துக் கொள். அதுபொழுது உனது ஆத் மாவை மெய்யான பயிற்சியின் மூலம் அடக்கி, மெய்ஞ் ஞானச் சுடரொளியால் உன்னிதயம் உயிர்பெற்றிடச் செய்யவேண்டும்.

கவனி...!

நீ என்னிடம் கேட்டுக்கொண்ட வினாக்களில் சில வற்றிற்கு எழுதியும், சொல்லியும் விடை தந்திட இய

லாது. ஆயின் நான் கூறுகின்ற அந்த உயர்நிலை உன்னிடம் பிரதிபலித்திடவேண்டும். அப்பொழுதுதான் அவை என்னவென நன்கு புலனாகும். இல்லையேல் நீ அவற்றை விளங்கிக் கொள்ளமுடியாது. ஏனெனில் இது உற்றறியும் ஆற்றல். அவ்வாற்றலைச் சொல்லால் செப்பிடுவது இயலாது.

மேற்கோளாக:

தித்திப்பும் கசப்பும் இருக்கின்றனவே, அவற்றைச் சுவைத்துப் பார்க்காமல் இன்னதெனப் புரிந்துகொள்ள முடியுமா?

ஒரு சம்பவத்தையும் கவனி.

ஒரு தனவந்தர் தமது நண்பர் ஒருவருக்கு "புணரின்பம் எவ்வாறிருக்குமென எனக்கு நன்கு விளக்கி எழுது...!" என்று தபால் வரைந்திருந்தார், அதற்கு அந்த நண்பர் எழுதிய பதில் கடிதம் இது:

"உன்னை நான் இதுவரை ஆண்மை குன்றிய 'அலி' என்று மட்டும் எண்ணி இருந்தேன். இப்பொழுதுதான் நீ அலியாக இருப்பதுமட்டுமல்ல; சர்வமுட்டாளுங்கூட என்று அறிந்தேன். தானே அனுபவித்துணரும் விஷயம் அது. சொல்லாலும் எழுததாலும் தீட்டிவிட முடியவே முடியாது...!"

17. மகனே !

சில விஷயங்கள் நாம் மேற் கூறிய வகையைச் சார்ந்வை. மற்றும் சில வகைகள் இருக்கின்றன. விளக்கமும் தரவியலும் அவற்றிற்கு. அவைகள் பற்றித் தகுந்த விளக்கத்துடன் நாம் இயற்றிய "இஹ்யாவு—ல்-உலூம்" என்னும் நூலிலும், மற்றும் பல நூல்களிலும் வரைந்துள்ளோம். இவ்விஷயங்களை அங்குத் தேடிப்பார்!

இருப்பினும் இங்குச் சயிக்கினையாகச் சிலவற்றைக் கூறுகின்றேன் கேள்! மெய்வழி செல்லுபவர் அனுஷ்டிக்க வேண்டிய விதிகள் நான்கு.

1. விடாப்பிடியான நம்பிக்கை. இதில் மார்க்கத்திற்குப் புறம்பான எதுவும் கலந்துவிடக்கூடாது.

2. தீர்க்கமான பாவமன்னிப்பு. பின்பு வழிச்சறுகல் பக்கம் திரும்பிடவே கூடாது.

3. விரோதிகளையும் நயந்துகொள்ளுவது. எவருக்கும் உன்மீது குறை இருக்கவே கூடாது.

4. இறைவனது கட்டளைகளை ஒன்றுவிடாது அனுஷ்டித்திடவேண்டிய அளவிற்கு மார்க்க அறிவையும் பயின்றிடவேண்டும்; மறுமையில் விடுதலை பயக்கும் அளவிற்கு ஞானத்துறையில் ஆற்றலைப் பெற்றிடவேண்டும். இவ்வளவைவிட அபரிமிதமாக்குவது கடமை அன்று.

நான் சொன்ன இவ்வாசகத்தை "ஷிப்லி,, (ரஹ்) அவர்கள் தருகின்ற சம்பவத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது உண்மை உனக்குத் தெற்றெனப் புலனாகும். அவர்கள் விளக்குகின்றார்கள்:

"நான் நானூறு ஆண்டுகள் பேராசிரியர்களுக்குப் பணிவிடை புரிந்திருக்கிறேன். நாலாயிரம் ஹதீஸ்—நாயக வாக்குகளையும் பயின்றுள்ளேன். அவற்றிலிருந்து ஒரே ஒரு நாயக வாக்கை மட்டும் பொறுக்கி எடுத்து அதன்படி ஒழுகுகின்றேன். மற்றவற்றை விட்டுவிட்டேன். நான் தீரவாராய்ந்து பார்க்குங்கால் அந்த ஒரு வாசகத்திலேயே எனக்குத் தகுந்த வெற்றியின் வழி இருப்பதாய்க் கண்டேன். ஞான மேதைகளான முன்னவர்களது ஞானக் கருவூலமெல்லாம் அதனுள் மறைந்து புதிராய் கிடக்கக் கண்ணுற்ற யான், அவ்வொரு வாசகமே போது மெனத் தீர்மானித்துவிட்டேன்.

அதாவது இறைதூதர் ஒருநாள் தமது சகாக்களில் ஒருவரை நோக்கி, 'நீ இவ்வுலகிற்காக, அதில் தங்க விரும்பும் அளவிற்கு நற்கிரியை புரிந்திடு! மறுமைக்காக, அங்கு வாசம் செய்திட எண்ணும் அளவிற்கு நற்பணி யாற்று! உனது இரட்சகனுக்காக, அவனிடம் உனது தேவை இருக்கின்ற தரத்திற்குத் தக்கவாறு செயல்புரி! நரகத்திற்காக, அதன்மீது உனக்கேற்படும் பொறுமையின் அளவிற்குச் செயலாற்று...!' என்றுரைத்தார்கள்..."

•

19. மகனே!

மேற்கூறிய இந்த வாசகத்தை நீ நன்கு கவனத்திலிறுத்திக்கொண்டால், எஞ்சிய மற்றெந்த அறிவும் உனக்கு அவசியமே இல்லையெனபேன். இங்கு வேறொரு சம்பவமும் தருகிறேன்; தீர ஆய்ந்தலசிப்பார்...!

—'ஷக்கீக்குல் பல்கி' என்னும்பேரறிஞரிடம் பல மாணவர்கள் அறிவு பயின்றனர். அம்மாணவர்களுள 'ஹாத்திமு-ல்-அசம்மு' என்டவரும் ஒருவர்.

ஒருநாள் ஆசிரியர் ஷக்கீக் கேட்டார்கள்: "நீர் என்னேடு முப்பதாண்டுகள் இருந்திருக்கிறீர். அவ்வாண்டுகளில் நீர் பயின்றதென்ன?" மாணவர் ஹாத்திம் சொன்னார்: "கல்வித் துறையிலிருந்து பயனுள்ள எட்டு விஷயங்களைத் திரட்டியுள்ளேன். அவை எனக்குப் போதும் என்று நினைக்கிறேன். நிச்சயம் அவற்றில் எனக்குத் தகுந்த வெற்றிப்பாதை உண்டென்றே நம்புகிறேன்..."

"அவை எவை என? 'ஷக்கீக்' கேட்டார்கள்.

ஹாத்திம் துவக்கினார்:

1. நான் மக்களைக் கண்ணுற்றேன். ஒவ்வொருவருக்கும் தனித்தனி நேசப்பொருட்களிருக்கின்றன. அவ

ரவரும் அவ்வவ்வஸ்துக்களை நேசிக்கின்றனர். அவற்றுள் சில அம்மனிதரை மரண வியாதிவரை நேசிப்பதுமுண்டு; மண்ணறைவரையுங்கூட உடன் செல்லுபவைகளுமுண்டு. ஆனால் அங்கு அவரைத் தன்னந்தனியாக விட்டுவிட்டு வந்து விடுகின்றனவேயன்றி, மண்ணறையினுள்ளே அந் நேசர்களுள் எவையும் புகத்துணிவதில்லை.

ஒரு மனிதனுக்குள்ள நேசப் பொருட்களில் சிறந்தது, அவருடனே மண்ணறையுள்ளேயும் பிரவேசித்து அவரோடு சிலாகித்துக்கொண்டிருக்கும் ஒரு பொருளே என்று ஆய்ந்து முடிவுககு வந்தேன். அது களங்கமிலாத் தூய கிரியைகள் என்னும் நற்பொருள்தான் எனக் கண்டுபிடித்து, அதையே எனக்கு உகந்த நேசனாய்ச் சமைத்துக்கொண்டேன். அது எனது மண்ணறையில் மங்காத் தீபமாகும்; அது என்னோடு சிலாகிக்கும்; என்னை அது தன்னந்தனியாய் விட்டுவிடாது!

2. மனிதர்களைக் கவனித்தேன். அவர்கள் எல்லாருமே தங்கள் இச்சைக் கிணங்கி, நாடுவன செய்திட விரைந்தேகுகின்றனர். நானோ, "எவர் தமது இரட்சகனின் சன்னிதானத்தை அஞ்சி இச்சையை விட்டு மனத்தைத் தடுக்கின்றாரோ, அவர் வந்தொதுங்கும் ஸ்தலமாகவே சுவனம் அமைந்துள்ளது..." என்னும் இறைவசனத்தைத் துழாவினேன். திருமறை மெய்யே சொல்லிற்று என்று தீர்மானித்தேன். உடனே எனதான்மாவுக்கு மாறிழைக்க முனைந்து, அதன் திமிரை அடக்கி பயிற்சியளித்திட எழுந்தேன். எனவே அது இறைவனுக்கு அடங்கிடப் பயிற்சி பெற்றது; பணிந்தது!

3. மக்களைக் கண்ணுற்றேன். அவர்கள் ஒவ்வொருவரும் உலகாயதப் பொருட்களைத் திரட்டுகின்றனர். பிறருக்குச் செலவிடாது கரத்தை இறுக மூடிக் கொள்ளுகின்றனர். நானோ, "உங்களிடம் இருப்பவை

யாவும் செலவாகியே தீரும். இறைவனிடம் இருப்பது தான் (அழியாது) தங்கும்......!'' என்னும் திருமறை வசனத்தை ஊன்றி கவனித்தேன். எனவே உலகில் எனக்குக் கிடைக்கும் பொருளை எல்லாம் இறைவனுக்காக ஏழை, எளியவருக்கு வழங்கிவிடுகிறேன், அதுவே எனக்காக இறைவனிடம் கைங்கரியமாய்த் தங்கும் என்பதற்காக......!

•

4. நன்கு கவனித்தேன். மக்களில் சிலர், தங்களுக்குள்ள இனத்தவர், பந்துக்கள் மிதமாக இருப்பதிலே தான் பேறும் பெருமையும் இருக்கிறதென்றெண்ணி அவர்களோடு ஏமாந்துவிடுகின்றனர். வேறு சிலரோ பணப் பெருக்கிலும், சொத்து, செல்வாக்கிலும், சேய்ச் செருக்கிலுமே மகிமை இருப்பதாய் எண்ணி படாடோபமடிக்கின்றனர். மற்றுஞ் சிலரோ, பிறர் பொருளைப்பிடுங்கி அவர்கட்குத் துன்பமிழைப்பதிலும், கொலை செய்து குருதி ஓட்டுவதிலும் கௌரவம் இருப்பதாய்க் கனவு காண்கின்றனர்.

இன்னொரு கூட்டமோ, பொருளை விரயம் பண்ணி விளையாடுவதிலேயே பெருமை இருக்கிறது என்று கருதிக் கொள்ளுகின்றது.

நான் "உங்களில் எவர் இறைவனை மிக அஞ்சிக் கொள்ளுகின்றனரோ அவர்களே இறைவனிடம் என்றென்றும் மங்கா மதிப்பிற்குரியவர்......'' என்னும் மறையின் கூற்றை ஆழ்ந்து ஆழ்ந்து, தக்வா என்னும் பக்திப் பேறு தான் சிறந்ததென முடிவு கண்டேன். நிச்சயம் திருமறையே மெய்யுரைக்கத் தக்கது என்றும், அம்மக்களது எண்ணமும் கனவும் வீண், அர்த்தமற்றது என்றும் தீர்மானித்தேன்.

5. நான் மக்களைப் பார்த்தேன். அவர்களில் சிலர் சிலரை எள்ளி நகைக்கின்றனர்' ஏளனமாய் எண்ணுகின்ற

னர். இதற்கெல்லாம் காரணம், பொருளிலும், பெருமையிலும், அறிவிலும் ஏற்பட்ட பொருமையாகத்தான் இருக்க வேண்டுமெனப் புரிந்து கொண்டேன். "நாம் தாம் அவர்கட்கு மத்தியில் வாழ்க்கைச் சாதனங்களை உலகில் பங்கிட்டுக் கொடுக்கிறோம்......" என்னும் மறை வாக்கை நன்கு அலசிப் பார்த்தேன். பங்கிடுவதெல்லாம் ஆதியிலேயே இறைவனால் நிகழ்ந்துவிட்டது எனப் புரிந்தேன். எனவே எவரிடத்தும் வஞ்சம், குரோதம் கொள்ளவில்லை. இறைவன் விதித்ததை ஏற்றுக் கொண்டேன்.

6. மக்களை நோக்கினேன். அவர்களில் சிலர் சிலரோடு சண்டை—வம்பிட்டுக் கொள்ளுகின்றனர், ஏதோ சில உட்கருத்தோடு.

"நிச்சயம் ஷைத்தான் உங்களின் விரோதி. அவனை விரோதியாகவே வைத்துக் கொள்ளுங்கள்! என்னும் இறை வசனத்தைத் துருவினேன். ஷைத்தானைத் தவிர்த்து மற்றவர்களிடம் விரோதித்துக்கொள்வது ஆகாது என்று முடிவு கட்டினேன்.

7. மக்கள் குழாத்தை நோக்கினேன். உலக வாழ்வை விஸ்தரிக்கப் பொருள்தேட மிகமிகப் பிரயாசைப் படுகின்றனர். அதன் நிமித்தம் மார்க்கத்திலாகாத வகையில் கூடப்பொருள்களைத்திரட்டி விடுகின்றனர். "இந்த உலகில் வசிக்கின்ற எந்த ஜீவனுக்கும் இறைவனிடமே உணவு இருக்கிறது..." என்னும் மறை வசனத்தில் சிந்தனையை ஓட்டினேன். எனக்கு உணவளிக்கும் பொறுப்பும் இறைவனிடம்தான் இருக்கிறது என்றறிந்தேன். எனவே, வணக்கத்திலீடுபட்டேன். இறைவனல்லாத வேறெந்தப் பொருள் மீதுள்ள நம்பிக்கையைத் துண்டித்துக்கொண்டேன்.

8. ஆராய்ந்தேன்: ஒவ்வொருவரும் சிருஷ்டிகளையே நம்பியுள்ளனர். சிலர் பொன்னையும், வெள்ளியையும்,

வேறு சிலர் பொருளையும் ஆட்சியையும் நம்பியுள்ளனர். மற்றுஞ்சிலர் தொழிலையும், அடுத்த சிலர் தமது நண்பனை யும் நம்பியுள்ளனர்.

"இறைவனை எவர் நம்பினரோ, அவர்களுக்கு அவனே போதுமானவன்; நிச்சயம் இறைவன் அவர்களது சகல காரியங்களையும் நடாத்துபவன். எல்லா வஸ்துவிற்கும் ஒரு அளவை, தரத்தை நியமித்துள்ளான் என்பது சர்வ நிச்சயம்..."— என்னும் அறவாக்கினை அலசிப் பார்த்தேன். முடிவாக அல்லாஹ்வையே நம்பினேன்; அவனே எனக்குப் போதுமானவன்; நல்ல பொறுப்பாளியுங்கூட..."

—இவ்வாறு நீண்ட விளக்கத்தைக் கூறி முடித்தார் ஹாத்திம்.

மாணவர் ஹாத்திமின் விரிந்த விவேகத்தை, அறிவின் சாரத்தை, ஆற்றலின் கருவூலத்தை இமைகொட்டாது கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்த பேரறிஞர் சக்கீக் இவ் வாறு பகன்றார்:

"இறைவன் உமக்கு நல்லருள்பாலிப்பானாக! நான் தவ்ராத் இன்ஜீல், ஸபூர், புர்கான் போன்ற வேத நூல் களைக் கண்ணுற்றிருக்கிறேன். அந்த நான்கு நூல்களும் இந்த எட்டு விஷயங்களைத்தான் திரும்பத் திரும்பக் கூறு கின்றன. எவர் இவ்வெட்டு காரியங்களில் நிலை நிற்கின் றாரோ, அவர் அந்த நான்கு வேத கிரந்தங்களிலுள்ள பிர காரம் நிச்சயம் ஒழுகியவராவார்...,'

20. மகனே !

இவ்விரு சம்பவங்களைக் கேட்டபின் நீ அதிக அறி வின்பக்கம் தேவை கொள்ளாய் எனப் புரிந்துகொண் டேன். சத்திய ஞான வழி செல்லுவோருக்குக் கடமை யானது என்னவென்று விளக்குகின்றேன், கவனி!

இவ்வழி செல்லுகின்ற ஒருவருக்கு, அன்றாடப் பயிற்சி யளிக்கத்தகுந்த நேர்மையான ஒரு ஞான குரு அவசிய மாகும். அப்பொழுது அந்த ஞான குருதான் இந்த சீட ரிடமுள்ள துர்க்குணமகற்றி நற்குணத்தை புகட்டிட முடியும்.

ஞானகுரு அளிக்கின்ற பயிற்சியை, ஒரு விவசாயி னுடைய கண்காணிப்புக் கொப்பிடலாம். அவன் கழனி யில் விளைந்திருக்கும் பயிர்களுக்கு இடை இடையே முளைத்திருக்கின்ற களைகளையும், இடர் அளிக்கின்ற செடி கொடிகளையும் பிடுங்கி எறிகின்றான், பயிர்கள் செழித் தோங்கி வளர வேண்டும் என்பதற்காக! அதேபோன்று தான் பயிற்சி அளிக்கின்ற குருவும்.

இறைவன் தனது தூதரை மக்களுக்கு நல்வழி காட்டு தற்காக அனுப்பியுள்ளான் அல்லவா? அவர் இவ்வுலகு நீத்து மறைந்து விட்டாலோ, அவரின் பிரதிநிதிகள் வந்து மக்களுக்கு நேர்வழி காண்பிக்கின்றனர். அதேபோலத் தான் ஒரு சீடருக்கு, ஒழுங்கான பயிற்சியளித்து இறை வழி பக்கம் அழைக்கும் உண்மையான ஒரு ஞான குரு தேவை என்று சொன்னேன்.

அந்த ஞான குருவுக்குப் பல நிபந்தனைகள் உள்ளன:

அவர் இறை தூதருக்குப் பிரதிநிதியாக வரும் அள விற்கு உயர்ந்திருக்க வேண்டும்.

நல்ல முறையில் அறிவு பயின்று அதன்படி ஒழுகு கின்ற அறிஞராய் இருத்தல் அவசியம்.

அறிஞர் என்னும் பெயரில் வருபவரெல்லாம் இவ்வழி காண்பிப்பவரல்லர். கற்றவரெல்லாம் தாம் ஒரு ஞான குருவென்று வாதித்திட (அதை நீ நம்பிவிட)க் கூடாது என்பதற்காக, உண்மை ஞான குருவின் சின்னங்கள் பற்றிச் சுருக்கமாக விளக்குகிறேன்:

அவர் உலகாயத பாசங்களைப் புறக்கணித்து, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வரைக்கும் தவ ஞானத் தொடர்பு கொண்ட மெஞ்ஞான குருவைப் பின்பற்றி இருப்பார்.

உணவு, தூக்கம், பேச்சு போன்றவற்றைக் குறைத்தும், தொழுகை, ஈகை, நோன்பு போனறவற்றை மிதப் படுத்தியும் தமது ஆத்மாவைப் பண்படுத்தி நல்ல நிலையி லிருப்பார்.

மெய்ஞ்ஞான குருவைப் பின்னெழுகி அவரிடமுள்ள பெருமை, நனறி, நம்பிக்கை, ஈகை, திருப்தி, தன்னடக்கம், அறிவு, மெய் பேசுதல், வெட்கம், வாக்குறுதி, அமைதி, பெருந்தன்மை போன்ற உயர் பண்புகளை தம் வாழ்வின் வழிகாட்டியாக சமைத்துக்கொண்டிருப்பார்.

நபி அவர்களுக்குள்ள ஞானப் பிரகாசங்களில் சிலவற்றைத் தாமும் அடைந்திருபபார்.

பெருமை, ஈயாமை, பொறுமை, பற்றுமை போன்ற துர்க்குணங்கள் தம்மிடமிருப்பின் அவை அந்த ஜோதியில் பட்டுக கரிந்து சாம்பலாய்ப் போயிருக்கவேணடும்.

இவர் பிறரிடம் கேளாத அளவுக்கு ஞான ஆற்றல் உள்ளவராய் இருத்தல்வேண்டும். தேவைபபட்டால் பெருமானார் அவர்களிடமிருந்த அறிவாற்றல பக்கம் விருப்ப முள்ளவராய் இருக்கலாம.

இத்தகைய சின்னங்களே உண்மையான ஞான குருவிடம் இருப்பவை. இவரே நபியவர்களுக்குப் பிரதிநிதியாக வரததகுந்தவர். இவரிடம் "பய் அத்"—தாசப் பிரமாணம் கொளளலாம். பெருமானாரவர்களது ஞான ஜோதிகளில் பங்குபெற்றிருக்கிறார் எனற காரணத்தால்..."

ஆனால் இத்தகைய பண்பாடுள்ள ஒரு ஞான குருவைப் பெறுவது இன்று மிக மிகக் கடினம்.

மேற்கூறிய வகையே உள்ள ஒரு 'ஞான குருவை ஒரு சீடர் பெற்று, அவரும் இவரை ஒரு தாசராக ஏற்றுக் கொண்டால், அந்த குருவிடம் இவர், அகநிலை புறநிலை இரண்டிலும் மிக மரியாதையாக நடந்துகொள்ளவேண்டும். புற ஒழுக்கங்கள்:—

அவரிடம் தர்க்கித்தல் கூடாது; சொல்லும் சட்டங்களுக்கெல்லாம், அவை தமக்குப் புரியாததாகப் பட்டால் கூடக் காரணங்கள் கேட்டுக்கொண்டிருப்பது தகாது.

அவர் முன்னால். தொழுகையின் நேரத்தில் அல்லாது, மற்ற நேரங்களில் தொழுகை விரிப்பை போடாதிருத்தல் வேண்டும். தொழுகை முடிந்ததும் அவ்விரிப்பை சுற்றி வைத்து விடுவது"

அவரது முன்னிலையில் 'நபில்' வணக்கத்தை அதிகப்படுத்துவது அழகல்ல.

குரு இடுகின்ற கட்டளைகளைத் தம்மால் முடிந்த அளவு தவறாமல் செய்வது.—என்பனவாகும்.

அக ஒழுக்கங்கள் :

குரு மகானிடமிருந்து கேட்பவற்றை எல்லாம் மனப் பூர்வமாய் ஏற்றுக்கொள்ளவேண்டும். சொல்லிலும், செயலிலும் மறுப்புக்குறி தென்படக்கூடாது. உள்ளொன்றுவைத்துப் புறமொன்று கூறும் நயவஞ்சகன் என்னும் பெயர் வராதிருக்கவேண்டும் அல்லவா!

அப்படித் தம்மால் முடியாவிட்டால் தமது அக நிலை புற நிலைக்கு ஒத்ததாய்ச் சமைகின்ற வரை அந்த குருவின் சகவாசத்தை விட்டுவிட வேண்டியதுதான்!—என்பன.

மேலும் அந்தச் சீடர் தமது ஆத்மாவை ஒரு கட்டுப்பாட்டிற்குள் வைத்துக்கொள்ளவேண்டும். துர் நடத்தை

யுள்ள நண்பர்களிடம் பழகாதிருந்தால்தான் மேற்கூறிய பண்புகள் உண்டாகச் சாத்தியமாகும். தவிரவும் இவரது உள்ளத்திலும் ஷைத்தானின் ஆர்ப்பாட்டங்கள் இல்லாமலிருக்க முடியும்.

மேலுமிவர் எல்லா நிலைகளிலும் பண எண்ணத்தைத் தவிர்த்து ஏழ்மையைத் தெரிந்துகொள்ளவேண்டும்.

இங்குத் தரப்பட்ட விஷயங்கள் ஒரு சீடர் மீது என்றென்றும் கடமையான முக்கிய அம்சங்களாகும்.

அடுத்து "தஸவ்வுப்"—ஞானம் என்றால் என்னவெனக் கேட்டிருந்தாய் அல்லவா?

நன்கு கவனி!

"தஸவ்வுப்" என்பதற்கு இரு அங்கங்கள் உள்ளன. ஒன்று அல்லாஹ்வை ஸ்திரமாக நம்பி அவனோடு நிலை பெற்றிருப்பது. இரண்டு, மக்களிடம் தேவையாகாது அமைதியாய் இருப்பது.

எவர் இறைவனோடு நிலைத்திருந்து, மக்களிடம் தமது பண்பை அழகுபடுத்தி, அவர்களிடம் அறிவோடு நடந்துகொள்ளுகிறாரோ அவரே உண்மை 'சூபி'—ஞானி.

அல்லாஹ்வோடு நிலைத்திருத்தல் என்பது தமது மன நோக்கைவிட இறைவனது கட்டளையை முற்படுத்துவதாகும்.

மக்களோடு நற்பண்பு கொள்ளுவதென்றால், உனது நோக்கத்திற்கு மக்களைத் திருப்புவது அல்ல; மார்க்கத்

திற்கு முரணுகாத வகையில் அவர்களது நோக்கத்திற்கு உன்னைத் திருப்புவதாகும்.

பின்பு கவனி!

'உபூதிய்யத்'—வணக்க வழிபாடு பற்றி வினவினுய் அல்லவா ? அது மூன்று வகையாகும் :

ஒன்று, மார்க்க விஷயீங்களில் பேணி நடப்பது. இரண்டு, இறைவன் விதித்ததை ஏற்றுத்திருப்திப்படுவது.

மூன்று, மன நோக்குப்படி நடவாது, இறைவனது திருப்தியைத் தேடுவது.

"தவக்குல்" பற்றிக் கோரினுய் ! 'தவக்குல்' என்பது, உனக்கென்று இறைவனுல் விதிக்கப்பட்ட ஒன்று—அது உன்னிடம் சேராது தடுத்திட இவ்வுலகமே முயன்ற போதினும்—சந்தேகமின்றி அது உன்னையே வந்தடையும். என்றும் உனக்காக நியமிககப்படாத ஒன்று—இவ்வுலகம் பூராவும் உபாயமாய் நின்று அதை உன்னளவில் சேர்பபிக்க நாடினபோதும்—அது உன்னிடம் வரவேமாட்டாது என்பதையும் நீ நன்கு உறுதிப் படுத்திக் கொள்வதாகும்.

ஒரு உபன்யாசி மார்க்கத்திலிருந்து கெடுப்பவற்றை ஒரு ஷைத்தான்கூடச் செய்து முடிககவியலாது! எவருககேனும் கையும், தைரியமும் இருந்தால் இவனை முஸல்மான்களது மேடையை விட்டு விரட்டிக் கொள்ளட்டும்! இவனை விரட்டியடிப்பது, நன்மையை ஏவி, தீமையைத் தவிர்க்கும் பானமையைச் சார்ந்ததாகும் என்று திடமாக உரைப்பேன்.

நீ விட்டுவிடவேண்டியவற்றுள் மூன்ருவது: மன்னர்கள், தனவந்தர்களிடம் நீ கலந்துறவாடாமலும், அவர்

களைப் பெரிதெனக் கருதாமலும் இருத்தல் வேண்டும். ஏனென்று கேள்! அவர்களை மதிப்பதும், அவர்களை அண்முவதும் பழகுவதும் பெரும் பயங்கர ஆபத்தாகும்.

அப்படி அவர்களோடு உறவு கொள்ள உனக்குச் சந்தர்ப்பம் நேர்ந்துவிட்டால், அவர்களிடம் முகமன் கூறுவதைத் தவிர்த்துக்கொள்! ஏனென்றால் அநீதனும், பாபியும் புகழப்படும்பொழுது இறைவன் கோபிக்கிறான். அவர்களது நீடித்த ஆயுளுக்குப் பிரார்த்திப்பவன் இவ்வுலகில் பாபியாகின்றான்.

நீ தவிர்க்கவேண்டிய நான்காம் பொருள்: தனவந்தர்களும், மன்னர்களும் அளிக்கின்ற சன்மானங்களை, அவை 'ஹலால் என்றறிந்தபோதினும் அவற்றினை நீ ஏற்றுக்கொள்ளக் கூடாது. அவைகளிடம் அபிலாஷைப் படுவது தீனையே பாழ்பண்ணிவிடும். இவ்வாறு செய்வதால், அவர்களது அந்தஸ்தை மதிக்க ஒத்துழைப்பது, அவர்களது அநீதத்தில் பங்கு கொள்வது போன்ற இழி நிலை பிறந்து விடுகிறது. இவையனைத்தும் மார்க்கத்திற்கு நாசக் கருவிகளாகும். சிறிய ஓர் இடர்பற்றிக் குறிப்பிடுகிறேன் கேள்!

நீ அவர்களது சன்மானங்களை ஏற்றுக்கொண்டால் அவர்களை அதிகம் நேசிக்க விரும்புவாய். ஒருவரை நேசிப்பவர் அவரது நீண்ட ஆயுளையும் விரும்புவார். ஓர் அநீதனுக்காக நீண்ட ஆயுளை விரும்புவது, மக்கள் மீது அநீதியையும், உலகமே நாசம் அடைவதையும் நாடுவதாகும். தீன்—மார்க்கத்தையும், இறுதி நிலை நற்பாக்கியத்தையும் மிகமிகப் பாழ்பண்ணிட இந்த நேசத்தை விட வேறெதுமுண்டோ? எச்சரிக்கை! மீண்டும் எச்சரிக்கிறேன்! ஷைத்தானின் தூண்டுகோலாலேயோ, சிலர் உன்னை நோக்கி, ''அவர்களிடமிருந்து சன்மான திரவியங்களை வாங்கி, நீங்கள் உபயோகிக்காவிட்டாலும், ஏழை

கள். இல்லாதவர்களுக்குப் பங்கிடலாம் அல்லவா. அந்த தனவந்தர்களோ பாபத்திலும் துர்க் கருமங்களிலும் செல விடுகின்றனர். அவர்கள் விரயம் செய்வதைவிட நீங்கள் அவற்றை அகதிகளுக்கும் அநாதைகளுக்கும் பகிர்ந்து கொடுப்பது சிறந்ததல்லவா?'' என்று தெம்பு மொழி பகரு வதாலோ நிலைமாறி நீ மதி மயங்கிவிடக் கூடாது என்று திரும்பவும் எச்சரிக்கின்றேன். ஏனெனில் அந்தச் சபிக்கப் பட்ட ஷைத்தான் இவ்வாறு உற்சாகப்படுத்தியே பலர் கழுத்தை அறுத்திருக்கிறுன். இதனுல் விளையும் இடர் கணக்கிலடங்காதது. அவற்றை 'இஹ்யாஉ-ல்-உலூம்' என்னும் நூலில் விரிவாக விளக்கியுள்ளேன். அங்குத் தேடிப் பார்!

நீ அனுஷ்டிக்கவேண்டிய காரியங்கள் நான்கு என்று முதலில் கூறினேன் அல்லவா? அவற்றுள் ஒன்று:

நீ இறைவனுக்குக் கட்டுப்படுவதை நான் சொல்லும் வகையில் அமைத்துக்கொள்! அதாவது பணிபுரிகின்ற அகதி ஒருவன் உனக்கு உகந்த வகையில் ஒரு காரியத் தைச் செய்தால் உனது உள்ளம் திருப்தியடையும்; சின மடையாது. அவன் மாறிழைத்தாலோ அதிருப்தியும் வெறுப்புமே உனக்கு அதிகமாகும்.

அதே போன்றுதான் அத்தகைய தவறு உன்னிடம் நிகழும் போது உனது எஜமானனுன இறைவன் உன்னிடம் திருப்தி அடைவதில்லை. நீ உன் அடிமைக்கு எஜமானனுய் இருப்பதைவிட, உனக்கும் மற்றவருக்கும் உண்மையான ஏக எஜமானன் இறைவனே!

இரண்டாவது:

நீ மக்களோடு கலந்து உறவு கொள்ளும் பொழுது உன்னைப் போன்றே பிறரையும் எண்ணிக்கொள்! ஏனென்ருல், ஒரு மனிதன் தான் விரும்புபவற்றை அடுத்தவருக் கும் விரும்பாதவரை அவனது ஈமான் சம்பூரணமாகாது.

மூன்றாவது :

நீ ஓர் அறிவைப் பயிலும் பொழுதும் ஒரு நூலை துருவிப் பார்த்து அறிவைக் கிரகிக்கின்ற பொழுதும், அது உனது இதயத்தின் மாசகற்றி ஞான ஒளி தந்து மனத்தைத் தூய்மைப் படுத்துவதாய் இருத்தல் வேண்டும். உதாரணமாக நீ இன்னும் ஒரு வாரம்தான் ஜீவித்திருப்பாய் என்று வைத்துக்கொள்வோம். அந்தக் குறுகிய காலத்தில் சட்டக் கலை, வாதப் பிரதிவாதம், சட்ட அடிப்படை, தர்க்க சாஸ்திரம்போன்ற அறிவுகளைப் பெறுதற்கென்று நீ முனைவது தகுமா? இத்தகைய அறிவாற்றல மறுமைக்கு உதவாதென்று நன்கறிவாய்' அல்லவா ? ஆனால் இப்பொழுது இதயத்தை இறை சிந்தனையில் ஈடுபடுத்தி, ஆத்மார்த்தத் தன்மைகளை நன்கு புரிந்து, உலகாயதத் தொடர்புகளைத் துண்டித்து, இழி குணங்களையகற்றுதற்குப் பாடுபட வேண்டும். இறை பாசம், பக்தி, நல்லொழுக்கம் போன்றவற்றைப் பெற முனைதல் கடன் என்பேன். ஏனெனில், ஒரு மனிதனுக்கு மரணம் வராது என்ற வகையில் ஓர் இரவு பகலாவது உறுதியாய்ச் செல்லுதற்கில்லை. ★

## 25. மகனே !

என்னிடம் வேறு சில வார்த்தைகளையும் கேள் ! அவற்றைத் தீர அலசிச் சிந்தித்துப் பார் ! உனக்கு விடுதலை கிடைக்கும். மன்னர் ஒருவர் ஒரு வாரம் உன்னைச் சந்திக்க வருகிறார் என்று ஒருவர் உன்னிடம் சொன்னால் அப்பொழுது நீ அவ்வொரு வாரத்திற்குள்ளாக உனது ஆடை, மேனி, வீடு, விரிப்பு போன்ற யாவும் மன்னரின் பார்வையில் துச்சமாய் பட்டுவிடக் கூடாது என்பதற்காகச் சீர்படுத்தச் சித்தமாகிவிடுவாய் என்று நான் நன்கறிவேன். புத்தி தீட்சண்யம் உள்ளவனாய் இருந்தால்

---

★ *(4-ஆம் விஷயம் அடுத்த 25-ஆம் தொடரில் வரும் பக்கம் 38-இல்.)*

நான் சகிக்கினை பண்ணியதை நன்கு அலசிப் பார் ! புத்தி சாலிக்கு ஒரு சொல் போதும் அல்லவா !

நபிமணி நவின்றார்கள் :

நிச்சயம் இறைவன் உங்கள் தோற்றங்களையும், புறச் செயல்களையும் நோக்கவில்லை. ஆனால் உங்கள் இதயங் களையும் நிர்ணயங்களையுமே கவனிக்கிறான் !''

இதய நிலைகளைப் புரிந்திட நீ விரும்பினால் நான் இயற்றிய "இஹ்யா'' அதுபோன்ற மற்ற ஞான நூல்களைப் புரட்டிப் பார் ! இந்த அறிவு ஞானம்தான். "பர்லு-அயின்'' —ஒவ்வொருவர்மீதும் குறிப்பாகக் கடமையானதாகும்.

உலு, தொழுகை போன்ற கடமையானவற்றைச் செயல் படுத்துவதற்குத் தகுந்த அறிவைத் தவிர மற்ற யாவும் "பர்லுகிபாயா'' —எதோ ஒருவர் மீது மட்டும் கடமையானதாகும். இறைவன் நாடினால் நான் கூறிய யாவற்றையும் நீ கிரகித்திட அருளளிக்க அவனே போது மானவன்!

(முன் தொடரிலுள்ள) நான்காவது:

உனக்காகவும் உனது பந்துக்களுக்காகவும் ஓர் ஆண்டு காலத்திற்குப் போதுமான உணவுப் பொருளுக்கு மேலாகத் தேடவேண்டாம். பெருமானார் அவர்கள் தங்கள் மனைவியர்களுள் சிலருக்கு மட்டுமே உணவுப் பொருளைக் கைங்கரியம் செய்வார்கள்.

இப்படி அடிக்கடிப் பிரார்த்திப்பார்கள். "இறைவா! முஹம்மத் உடைய குடும்பத்தாருக்கு உணவுப் பொருளைத் திருப்திகரமானதாய் அளித்தருள்வாயாக !''

மனைவிகள் அனைவருக்கும் சேமித்திடவில்லை. ஆயின் எவர் உள்ளத்தில் திருப்திக் குறைவு தென்படுகிறதோ அவர்களுக்கு மட்டும அவ்வாறு செய்தார்கள். எவர்கள் திட உறுதி உள்ளவர்களாய் இருந்தனரோ அந்த மனைவியர்களுக்காக ஒரு நாள் அல்லது அரை நாள் உணவுக்கு மட்டும் ஏற்பாடு செய்தார்கள்.

## 26. மகனே!

உமது கோரிக்கைகளை எல்லாம் இச்சிறு நூலில் எழுதிவிட்டேன். அவற்றில் ஒன்றையும் விடாது அதன் வழி நிற்பது உனது கடன். உனது உளம் கனிந்த பிரார்த்தனைகளில் என்னையும் சேர்த்திட மறந்துவிடாதே! என்னிடம் துஆ ஒன்று வேண்டுமெனக் கேட்டாய் அல்லவா ? அதை இஹ்யாவில் பார்த்து எடுத்துக் கொள் ! அதோடு இந்த துஆவை உனது எல்லா நேரங்களிலும், குறிப்பாய் ஐங்காலத் தொழுகைக்குப்பின் ஓதிக்கொண்டு வா !

இறைவா ! உன்னிடம் பூரண செல்வத்தை, இடைவிடாப் பாதுகாப்பை, தாராளக் கருணையினை, சுபிட்ச சேமத்தை வேண்டி நிற்கின்றேன் ! வாழ்வின் வளத்தை, வயதின் சுபவிசாலத்தை, பரந்த உபகாரத்தை, பயன் மிக்க இரக்க சித்தத்தை, நன்மையின் நயத்தைக் கோருகின்றேன் !

இறைவா! எங்களுக்காக நீ ஆகு! எங்களுக்குப் பொல்லாங்காகச் சமைந்திடாதே! இறைவா! எங்களின் இறுதிக் கட்டங்களை நற்பாக்கியத்தோடு முடி! எங்கள் அபிலாஷைகளை நிரப்பிடு! காலையிலும் மாலையிலும் எங்களுக்கு ஆரோக்கியத்தை அணுகச் செய்!

நின் கருணையளவில் எங்கள் கடைசி இடத்தை ஒதுக்கிடு! எங்கள் பாப பீடைகள் மீது உனது மன்னிப்பு

என்னும் மாரியினைப் பொழிந்திடு! எங்கள் குறைகளைச் சீர் படுத்திச் செப்பனிடு! பக்தியை எங்கள் சேமிப்புச் சாதன மாக்கி விடு! உனது தீனில் எங்களுக்குத் தெம்பைத் தந் திடு! நாங்கள் உன்னையே நம்பினோம். உன் மீதே எங்கள் பொறுப்பைப் போடுகிறோம்! நேரிய பாட்டையில் எங்களை நிலை நிறுத்திடு! மறுமையில் சம்பவிக்க விருக்கும் ஆயாச அசம்பாவிதங்களை விட்டு இவ்வுலகிலேயே எங்களைக் காப்பாற்று! பாபச் சுமைகளை எங்களை விட்டுக் குறைத்து விடு! நல்லார்களது வாழ்வை எங்களுக்கு வழங்கு! திருப் தியினைத் தந்தருள்! பொல்லார்களது பொல்லாங்கை விட்டு எங்களைத் திருப்பி விடு!

அல்லாஹ்! மிகைத்தோனே! மன்னிப்போனே! மறைப் போனே! அமைதியானவனே! அடக்கி ஆள்வோனே! இறைவா! கிருபையாளர்களிலெல்லாம் மிகக் கருணை யாளா! உனது இளகிய மனத்தால், எங்களையும் எங்கள் தாய் தந்தையர்களையும், சோதரர்களையும், குடும்பத்தவர் களையும் மண்ணறையின் வேதனையை விட்டும் நரகின் கொடூரத்தை விட்டும் விடுதலை வழங்கிவிடு!

நீ சகல வஸ்துக்கள் மீதும் திறன் மிக்கோன்! விடை பகன்றிடப் பொருத்தமானவன் நீயே!

சல்லல்லாஹு வஸல்லம் அலா ஸய்யதினு முஹம் மதின் வஆலிஹி வசஹ்பிஹி அஜ்மஊன் வல்ஹம்து லில் லாஹி றப்பில் ஆலமீன்.



# அபூஹுறைரு

இவரது இயற் பெயர் ''அப்துற்–றஹ்மான்'' என்பதாகும். ''அபூஹுறைரு'' என்பது இவரது பூனை பெயர் ஆகும். இப்பெயர் வந்ததற்குரிய காரணத்தை அவரே விளக்குகிறார்:

''ஆடு மேய்ப்பது எனது தொழில். ஒரு நாள் ஆடுகளை ஓட்டிக்கொண்டு புற்றரையின் பக்கம் செல்லுகையில் பூனைக்குட்டி ஒன்று குதித்துக் குதித்துத் தனியே ஓடிக் கொண்டிருந்தது. சிறிய ஜந்துக்களைக் கண்ணுற்றால் எனது உள்ளம் பரிவிரக்கங் கொண்டுவிடும். எனவே அதைப் பக்குவமாகப் பிடித்தெடுத்து, ஆடுகளமேய்த்ததும் எனது இல்லத்திற்குக் கொண்டு வந்து வளர்க்க ஆரம்பித்தேன். பெரும்பாலும் நான் வெளியில் போகும் போதும் வரும்போதும் அது என் கையிலும் தோளிலுமாக இருக்கும். இதைக் கண்ணுற்ற மக்கள் என்னை ''அபூஹுறைரு''—குட்டிப் பூனையின் தந்தையே!'' என்றழைக்க ஆரம்பித்தனர்.''

''கைபர்'' போர் நடந்து முடிந்த காலத்தில் இவர் இஸ்லாத்தைத் தழுவினர். தமது சொந்த நாட்டைத் துறந்து மதீனாவிலேயே வந்து தங்கிவிட்டார். அறநெறியிலேயே திளைத்திருந்து அண்ணலாரின் அன்பிலே பிணைந்துவிட்டகாரணத்தால் ''சுப்-பா'' என்னும் பள்ளி அறையிலேயே நீண்ட காலம் தங்கிவிட்டார். ''மஸ்ஜிதுந் நபவி''யிலுள்ள அண்ணலவர்களின் ''மிம்ப''ருக்கும், அதன் அண்

யிமைலுள்ள ஆயிஷா பிராட்டியின் அறைக்கும் அடிக்கடிப் போக வர இருப்பார். அண்ணல் அவர்கட்குத் துணைபோ வாராக மட்டுமல்ல; எதாவது உணவு கிடைத்தால் அதை அருந்திப் பசித்தீயை அணைத்துக் கொள்ளலாமே என்னும் நோக்குடனும் அப்படி நடப்பார். பசியால் துவண்டு கிடப் பார்; வாடி வதங்குவார். இவர் ஒரு பைத்தியக்காரர் என்று கூட மக்கள் சொல்லுவர். உண்மையில் பைத்தியம் இல்லை இவருக்கு.

இவர் நாயக வாக்கியங்களைப் பாடமாக்குவதில் மிகக் கெட்டிக்காரர். இவ்விஷயத்தில் பெருமானாரின் சகாக் களிலேயே முதல்வராகத் திகழ்ந்தார். இவர் அறிவித்த நாயக வாக்கியங்கள் மொத்தம் 5300.

அபூஹுறைரு தமக்குவந்த மனன ஆற்றல் பற்றி இப்படி விளக்கினார்:

"நான் ஒரு ஏழை மனிதன். நான் எப்பொழுதும் அண்ணலாரின் அண்மையிலிருப்பேன். நாயகத்தின் திரு வசனங்களைக் கேட்பதன் மூலம் என வயிறு நிரம்பும்; திருப்தி அடைவேன். "முஹாஜிர்"கள் கடை வீதிகள் சென்று வணிகத்திலீடுபட்டிருப்பர். "அன்சாரி"கள் தங்கள் பொருள்களைப் பாதுகாப்பதில் கவனம் காட்டுவர். நான் அண்ணலார் அருளுகின்ற அறவாக்குகள் அனைத்தையும் பகலெல்லாம் பாடமிட்டுக்கொண்டிருப்பேன். இரவு வேளை வந்ததும் அவைகள் சரியாக மனதில் பதிந்து விட்டனவா என்று பரிசோதிப்பதற்காகப் புரட்டிப் புரட்டிப் படிப்பேன். தயங்குபவற்றைப் பெருமானாரிடம் சொல்லிக் காட்டித் திருத்தம் பெற்று வருவேன். இருந்தும் நாயக வாக்கியங் களைப் பாடமிடுதல் சிரமமாகத் தென்படவே இறை தூத ரிடம் என் மறதி பற்றிக் கூறி மறக்காமலிருக்க மார்க்கம் தேடினேன். ஹதீஸின் மீது பற்றும் பித்தும் பிடித்திருந்த என்னை நோக்கி அண்ணலார், 'அபூஹுறைரு! உமது

மேலங்கியின் முன்தானையை ஏந்திப்பிடியும்!' என்றார்கள். உடனே எனது துணியை விரித்து ஏந்தினேன். பெருமானார் தங்கள் பொற்கரங்களால் எதையோ அள்ளி அள்ளிப் போடுவதுபோல் மூன்று தடவைகள் பாவனை செய்து விட்டு அந்தத் துணியை என் நெஞ்சோடு அணைத்துக் கொள்ளப் பணித்தார்கள். உடனே அப்படியே செய்தேன். ஏதோ ஒரு வகை சக்தி என் நெஞ்சில் ஊடுருவியது; குளிர்ந்த உணர்வு தோன்றியது. அவ்வளவுதான்; அன்றிலிருந்து அவர்களிடம் கேட்ட வாசகங்களில் ஒரு வார்த்தைகூட மறக்கவில்லை எனக்கு. ஒவ்வொரு வாக்கியங்களையும் செவியுற்ற நேரம், இடம் வரை எனது மனத்துள் பதிந்துவிட்டன." என்று விளக்கினார்.

பிறகு, "ஸைத்பின் தாபித்" என்பவரும் அவரது தோழர் ஒருவரும் இறை தூதரிடம் சென்று, "நாங்கள் பாடமிடுகின்ற வசனங்கள் மறந்துவிடுகின்றன. எனவே எங்களுக்காகப் பிரார்த்தியுங்கள்!" என்று வேண்டினர். ஆனால் அண்ணலார் "அதோ அந்தத் "தூஸீ" என்னும் அடிமை உங்களைவிட முந்திவிட்டார்." என்று அபூஹுறைரா பற்றிக் கூறினார்கள்.

"பெருமானார் அவர்கள் என்னிடம் சில 'வஸிய்யத்து'—இறுதி உபதேசங்களைச் சொல்லி முடித்து அதன்படி நடந்தே ஆகவேண்டுமென வலியுறுத்தினார்கள். 'சரி; நல்லது.' என்று நான் அப்படியே சிரமேற்றாங்கி என்னால் முடிந்த அளவுக்கு நான் அனுஷ்டித்து வருகிறேன்." என்று அபூஹுறைரா விளக்கம் தருகிறார். அந்த வஸிய்யத்துக்களே இவைகள்.

---

*["அல் இசாபா—பீ-தம்யீஸிஸ் சஹாபா" என்னும் வரலாற்று நூலில் வருகின்ற அபூஹுறைரா என்னும் படலத்தில், அவரைப் பற்றிக் குறிப்பிடும் வரலாற்றின் சுருக்கம் இது.]*

எப்பொழுதும் தமது அண்மையிலேயே வீற்றிருக்கும் அபூஹுறைரு (ரலி) அவர்களை நோக்கி நபிகள் கோமான வஸிய்யத்துத் தோரணையில் நவின்றார்கள்:

அபூஹுறைரு! நீர் உமது வலக்கரத்தால் உணவு உண்ணும் பொழுது இடக்கரத்தை ஊன்றிக் கொள்ள வேண்டாம். ஏனெனில் அவ்வாறு செய்வது, முற்காலத்து முரடர்களது செயலாகும்.

அபூஹுறைரு! நீர் வுலூ-மார்க்க சுத்தி செய்து முடிந்தால் "இன்ன அன்ஸலனாஹு" என்னும் வசனத்தை ஓதிக் கொள்ளும்! எவர் அவ்வாறு செய்வாரோ அவருக்காக—அவர் செய்யும் ஒவ்வொரு சுத்திக்காக, பகலெல்லாம் நோன்பு நோற்று இரவெல்லாம் நின்று வணங்கப்படும் ஒரு வருடத்தின வணக்கத்தை எழுதப்படுகிறது.

இரவு நேரங்களிலும் பகற்காலங்களிலும் அதிகமாகப் பிழை பொறுக்கத் தேடிக்கொண்டு இரும்! ஏனென்றால் அல்லாஹ் தனது அடியானுக்குக் கருணைபுரிய நாடினால், பாப மன்னிப்பு அதிகமாய்த் தேடுவதால்தான் நரகை விட்டு அவனைப் பாதுகாக்கின்றான்.

உலகாயதக் காரியம் உம்மீது இக்கட்டாகி, நீர் கடின சிரமத்தில் சிக்கிக் கொண்டால் அதுபொழுது "லாஹவ்ல -வ- லாகுவ்வத்த இல்லாபில்லாஹில் அலியுல் அலீம்"—மகத்தான அல்லாஹ்வின் உதவி கொண்டேயல்லாமல், மிடிமையை விட்டகலவோ, நன்மையைச்செய்யவோ திறனில்லை—என்னும் வசனத்தை மிகுதமாய் ஓதிக் கொண்டிரும்!. அப்பொழுது அல்லாஹ் நீர் விரோதிகளின் கரத்தில் கைதியாகி இருந்தால்கூட உம்மை விடுவித்து மகிழ்விக்கிறான்.

நீர் ஏதாகிலும் ஒரு வஸ்துவைக்கண்டு அது 'எனக்குச் சொந்தமாய் இருந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்' என்று சொல்லிக்கொண்டிருப்பது தகாது என்று உம்மை எச்சரிக்கின்றேன். ஏனெனின் அவ்வாறு கூறுவது 'முனபிக்'-நயவஞ்சகனின் செயல் ஆகும்.

'லுஹா' தொழுகையைக் கடைபிடித்துக்கொள்ளும்! சுவனத்திற்கு ஒரு வாயில் இருக்கிறது. அதன் வழியாக, 'லுஹா' தொழுதவர்கள் தவிர மற்றவர்கள் செல்லமாட்டார்கள்.

எவர் 'லுஹா' இரண்டு ரக்அத் தொழுகின்றாரோ அவரை, 'திக்ரு' செய்தவர்களில் ஒருவராக எழுதப்படுகிறது. எவர் அதை நான்கு 'ரக்அத்' தாகத் தொழுகின்றாரோ அவரை 'ஆபிதீன்'—வணக்கவாளிகளில் ஒருவராக எழுதப்படுகிறது. எவர் அதை ஆறு ரக்அத் களாகத் தொழுகிறாரோ அவரை "பாஇஸீன"—ஜெய சீலர்களில் ஒருவராக எழுதப்படுகிறது. எவர் அதை எட்டு ரக்அத் களாகத் தொழுகின்றாரோ அவரை 'சாதிக்கீன்'—மெய்யர்களில் ஒருவராக எழுதப்படுகிறது.

ஒவ்வொரு மாதத்திலும் 13, 14, 15-ஆம் நாட்களில் நோன்பு வைத்துக்கொள்ளும்! இந்த 'வெள்ளை நாட்களில்' நோன்பு நோற்பவருக்காக, ஒரு மாதம் ஏன் ஒருவருடமே நோன்பு வைத்த நன்மையை அல்லாஹ் குறித்து வைக்கிறான்.

சுவனத்திற்கு ஒரு வாசல் உண்டு. அதன் வழியாய் "அய்யாமு-ல்-பீல்" 'வெள்ளை நாட்கள்' என்னும் 13, 14, 15 நாட்களில் நோன்பு நோற்றோரே தவிர வேறெவரும் பிரவேசிக்கமாட்டார்கள்.

எவர் சுப்ஹு தொழுதபின்னர் சூரியன் உதிக்கின்றவரை அவ்விடத்திலேயே தங்கி அல்லாஹ்வை

'திக்ரு' செய்கின்றாரோ அவர் நிச்சயம் ஷைத்தானை வெற்றி கண்டுவிடுவார். ஒப்புக்கொள்ளப்பட்ட 'ஹஜ்ஜு', 'உம்ரா' இரண்டையும் செய்த நன்மையையும், அடிமையை விடுதலை செய்த இலாபத்தையும் அவர் மீது அல்லாஹ் எழுதுகிறான்.

மாதத்தின் முதல் நாளில் மனைவியுடன் மருவுவதைத் தடுத்து எச்சரிக்கின்றேன். காரணம், அவ்விதம் மருவின் உங்களுக்குப் பிள்ளை தரித்தால் அது பைத்தியம் உள்ளதாகிவிடும். மாதத்தின் நடுவிலுள்ள இரவிலும் மனைவியுடன் கூடுவது கூடாது. காரணம், குழந்தை மலடு உள்ளதாயும் துஷ்டத்தனம் மிக்கதாயும் ஆகிவிடும். ஹஜ்ஜுப் பெருநாள் இரவிலும் கூடாது. பிள்ளை ஆறு விரல்களுள்ளதாய்ப் பிறக்கும். புதன் இரவிலும் கூடாது. பிள்ளை போக்கிரியாகவும், கொலை பாதகனாகவும், அநியாயக்காரனுக்கு உபகாரியாகவும் சமைந்துவிடும். ஞாயிறு இரவில் செய்தால், குழந்தை பெற்றோருக்குக் கொடுமை இழைக்கக் கூடிய தாய் ஆகும். சூரிய வெளிச்சம்பட உம் மனைவியுடன் கூடாதீர்! குழந்தை தீவணங்கியாகிவிடும். நட்சத்திர ஒளியில் வைத்துக்கொண்டு உம் மனைவியுடன் மருவாதீர். குழந்தை தனக்கும் தன் குடும்பத்தவருக்கும் வறுமையைக் கொண்டுவந்துவிடும்.

கனி தரும் மரத்தருகில் வைத்துக் கூட வேண்டாம். குழந்தை அடக்கமற்றதாய் வளரும். கூடும் பொழுது மனைவியின் இன உறுப்பைப் பார்க்கக் கூடாது. காரணம் இது உம் உள்ளத்திலே குருட்டுத் தனத்தையும் பிள்ளைக்கு மட்டித்தனத்தையும் உண்டு பண்ணும். நீ பிரயாணம் செய்ய நாடினால் அன்றிரவு கூடாதீர்! குழந்தை விரயம் செய்யக் கூடியதாயும், இறைவனுக்குக்கூடாத பாபத்தில் மூழ்கி வீணாயும் சமைந்துவிடும்.

திங்கள் இரவிலே துணையாளோடு கூடும்! உங்களுக்குப் பிள்ளை தரித்தால், அம்மகவு இறைவனது வேத

நூலிலே பேணுதலுள்ளதாயும், இறைவனது ஏற்பாட்டை ஏற்றுக் கொள்வதாயும் சமைந்து விடும். செவ்வாய் இரவில் கூடினுலோ, களங்கமில்லாப் பக்தி கொண்ட உண்மை விசுவாசியாய் ஆகிவிடும். வியாழன் பகலில், மத்தியானம் ஆவதற்குள மருவினுலோ குழந்தை "பிக்ஹு"—சட்ட நூல் பயிலும் ஆலிம ஆகும். வெள்ளிக்கிழமை உச்சிப்பொழுதாகு முனபு மருவின், மகவு அடக்கமும், ஒழுக்கமும் உள்ளதாய்ச் சமைந்துவிடும். பொதுவாக உச்சிப்பொழுதிலிருந்து மாலை மூன்றரை மணி வரைக்கும் கூட வேணடாம். பிள்ளை மாறு கண்ணுள்ளதாய்ப் போய்விடும். மருவும்போது பேசக் கூடாது; பிள்ளை ஊமையாய்ப் பிறக்கும். நீர் கிப்லா திசை நோக்கி மனைவியுடன் கூடக் கூடாது.—இப்படித்தான ஜிப்ரீல் (அலை) எனககு வசியயத்துச் செய்துள்ளார்கள்.

படுக்கையிலிருந்து நிர்வாணமாய் எழ வேண்டாம்; உம்மை ஏதாவது ஒரு ஆபத்துப் பீடிக்கும். முழங்காலைக் கட்டிக்கொண்டிருக்காதே; அதிலே துன்பங்களும் பீடைகளும் விளையும். வாசற்படியில் அமரவேண்டாம், அது சகல கருமங்களிலும் குறைபாட்டை உண்டு பண்ணும். இவையனைத்தும் இறைவனது நாட்டங்கொண்டே நடப்பவையாகும். ஒவவொன்றிற்கும் காரணம் உண்டு.

சாம்பல் மீதும், சிறுநீர் கழிக்க வேண்டாம். தடைபட்டுக் கிடக்கும் நீரிலும் சிறுநீர் கழிக்க வேண்டாம். நிச்சயம் அது தகாது. நீர் தொழுகையிலிருக்கும் பொழுது திரும்பிப் பார்க்கக் கூடாது. அவ்வாறு செய்கின்றவர் முகத்தில் ஷைத்தான் கைவைத்துத் தடவுகிருன. "வெற்றி பெருது போகின்றவனுக்கே அர்ப்பணம்!" என்றும் சொல்லிக்கொள்ளுகிருன். உமக்குத் தொழுகையில் கொட்டாவி வந்துவிட்டால் உமது கரத்தை வாயின்மீது

வைத்துக்கொள்ளும். சூரிய ஒளியிலே உம்முடைய இன உறுப்பைத் திறக்க வேண்டாம். காரணம், அவ்வாறு செய்பவரைச்சூரியன் சபிக்கின்றது. மூன்று வயதுக குழந்தையாக இருந்த போதினும் அது பார்க்கும் வகையில் நீர் உம் மனைவியுடன் கூட வேண்டாம். நோக்குகின்ற ஒவ்வொரு கண்ணை விட்டுமே மறைந்து கொள்ளும். மறை முகமாய் நடந்து கொள்ள வேண்டும் என்று தான் அல்லாஹ் பணித்துள்ளான்.

•

எவரின் இன உறுப்பையும் நீர் நோக்க வேண்டாம். உம்முடையதையும் எவருக்கும் காட்டவும் வேண்டாம். ஏனெனில் காண்பவனும் காணப்படுபவனும்சபிக்கப் பட்டவனேயாவான். மண்ணறைகளை மிதிகக வேண்டாம். அப்படிச் செய்தால் மறுமை நாளில் நரகத் தீயினை மிதிக்கும்படி அல்லாஹ் உமக்குக் கட்டளையிடுவான்.

பொய்ப் பிரமாணம் செய்வது பற்றி உம்மை எச்சரிக்கின்றேன். அது வீடுகளை வெறுமையாக்கிவிடும். மேலும் பொய்ப் பிரமாணம் கருக்குழியை மலடாக்கிவிடும். வம்சப் பாரம்பரியத்தையே துண்டித்துவிடும். ஒரு மூமின் பொய்ப்பிரமாணம் செய்தால் அவனைப் பார்த்து அல்லாஹ் "சபிக்கப்பட்டோனே, எதற்காகப்பொய்ப்பிரமாணம் செய்கின்றாய் ?" என்று கேட்கிறான்.

பொய் பேசுவதைப் பற்றி உமக்கு எச்சரிக்கின்றேன். பொய்யுரைப்பதிலேதான் உமக்கு விடுதலை இருக்கிறதென்று நீர் நினைத்தால், நிச்சயம் அதில்தான் (மறுமையில்) உனக்கு அழிவு இருக்கிறது. மெய்யுரைப்பதை நீர் கடைப் பிடித்துக்கொள்க. அதிலே உமக்கு நாசம் இருப்பதாய் நீர் கருதினும், நிச்சயம் மெய்யுரைப்பதிலேதான் உமக்கு விடுதலை இருக்கிறது,

•

ஏழை வறிஞர்களுடன் வீற்றிருப்பது பணிவு அடக்கத்தைச் சார்ந்ததாகும். அறிஞர் பெருமக்களோடு அமர்ந்திருப்பது இறைவனதுஎல்லையில்லாத்திருப்தியினை நீ பெறுவதாகும்.

தன் வாழ் நாளையெல்லாம் இந்த உலகத்தைத் தேடுவதிலேயே பாழ்பண்ணிக்கொண்டு, அறிஞர்களிடம் அமர்ந்து மார்க்க விஷயமாய் எதையும் கேட்டு விளங்க அக்கரைப்படாத ஒருவனே 'உண்மையில் தோல்வியுற்றவனுவான்'

எவன் கரத்திலே இந்த முஹம்மதுவின் ஆன்மா இருக்கிறதோ அந்த அல்லாஹ்வின்மீது பிரமாணமாகச் சொல்லுகிறேன்:—இல்மு உடைய சபையில் ஒரு மணி நேரம் தங்கி இருப்பது, நாற்பதாண்டுகள் வணங்குவதைவிட அல்லாஹ்வுக்கு மிக உகந்ததாகும்.

இல்மு இல்லாத அமல்—நற்கிரியை அனைத்தும் காற்றில் பறக்கும் புழுதியாகும். அடக்கம், ஒழுக்கம் இல்லாத அறிவு. புயல் நாளிலே வேகமாக அடிக்கும் காற்றிலே சிக்குண்ட சாம்பலுக்கு நிகராகும்.

எனது சமுகத்தவர்களுக்கு ஒரு காலம் வரும். அப்பொழுது தம்மிடமுள்ள கலா ஞானத்தை எடுத்துப் பிறருக்குச் சொல்ல மறுததுப் பெருமை அடிப்பார் ஓர் ஆலிம்.

இறை சிம்மாசனத்தின் கீழ் தங்கத்தினுலான ஒரு கட்டடம் இருக்கிறது. அதன் வாயிலில் இப்படி வரையப்பட்டுள்ளது. "எவர் ஓர் ஆலிமைத் தரிசிக்கிருரோ அவர் எனது நபிமார்களைத் தரிசித்தவர்போன்றவராவார். எவர் ஓர் ஆலிமுடன் அமர்ந்திருக்கிருரோ அவர் எனது நபிமார்

களுடன் அமர்ந்தவராவார். எவர் ஓர் ஆலிமுக்கு நன்மை செய்கின்றரோ அவர் எனது நபிமார்களுக்கு நன்மை செய்தவர் ஆவார். எவர் ஓர் ஆலிமுக்கு பணிவிடைகள் புரிகின்றரோ அவர் எனது நபிமார்களுக்குப் பணி விடைகள் புரிந்தவராவார்.''

இவ்வுலகமே நான்கு பேர்களைக் கொண்டுதான் நிலை பெற்றிருக்கிறது. ஒருவர் பேணுதலுள்ள ஆலிம். இரண்டாம் நபர் தயாளமுள்ள தனவந்தர். மூன்ரும் நபர் பொறுமையுள்ள ஏழை. நான்காம் நபர், நீதமுள்ள மன்னர்.

ஓர் ஆலிம் இறந்துவிட்டால் இஸ்லாத்தில் ஒரு குழுவே இறந்ததற்குச் சமமாகும். ஆயிரம் வணக்க சாலிகளைவிட ஓர் ஆலிமைக் கெடுப்பது இப்லீஸுக்கு மிகக் கடுமையா இருக்கும். வியபிசாரம் செய்கின்ற ஒரு பெண், ஆயிரம் ஆண்களைவிட இப்லீஸுக்கு மிக உகப்பானவளாவாள். ஒரு நாள் பாபமன்னிப்புத்தேடுவது ஐம்பதாண்டுகளின் பாபத்தையே மாய்த்துவிடும். ஒரு வருடத்திற்குத் தொடர்ந்து பாபமன்னிப்புத் தேடுபவர் நிலை பற்றிச் சொல்லவும் வேண்டுமோ !

அல்லாஹ் மக்களுக்கு நன்மை செய்யக் கருதினல் அவர்களுக்கு மத்தியில உபன்யாசிக்கும் ஓர் ஆலிமை நியமித்துவிடுகிருன். இறைவனது திருவசனங்களே இதற்குச் சான்ருகும். "முஹம்மதே! அஞ்சிக் கொள்ளுபவர்களுக்கு எச்சரிக்கை தருபவரே நீர்!'' ''ஒவ்வொரு சமுகத்தவருக்கும் வழி காட்டி உண்டு.'' ''ஒவ்வொரு சாராருக்கும் உபதேசிக்கின்ற நபி உண்டு. அவர் அம்மக்களுக்கு உபதேசித்து, நல் வழி காட்டுவார்.''

அல்லாஹ் அம்மக்களுக்குத் தீங்கை நாடினல் அவர்களிடம் வதிந்த ஆலிம் மரணிப்பார். அடுத்து அவர்கள் மீது சோதனைகள் சரமாகச் சொரியப்படும். நபிமூஸா

(அலை) இறைவனிடம் "பின் வரும் முஹம்மதுவின் சமு கத்தவர் உனக்குப் பாபம் இழைப்பரா? என்று வினவி னர். "மூஸா! ஆமாம் பாபம் இழைப்பர். அவர்கள் மீது எனது கோபம் மிகைத்திடும் அளவிற்குத் தகாத கரு மம் செய்வர். ஆயினும் ஆலிம்களுடனும், பள்ளிகளிலும் வீற்றிருப்பவர்களை நான கண்ணுற்றால் எனது கோபமே தணிந்து போய்விடும்" என்று அல்லாஹ் விடையிறுத் தான.

•

நீர் புது ஆடை அணிந்தால், கிப்லாவை முன் னோக்கி நின்று கொள்க. களங்கமில்லா உள்ளத்தோடு "பிஸ்மில்லாஹ் வல் ஹம்துலில்லாஹ்" என்று சொல்லிக் கொள்க! அடுத்து இரண்டு ரக்அத்கள் தொழுதுகொள்க. இதையும் ஓதிகொள்ளும்: அல்ஹம்து லில்லாஹில்லதீ கஸானீ மா உவாரி பிஹி அவ்ரத்தீ வ அஸ்த:னீ பிஹ் அனின்னசி வலவ்ஷா அல அ:ரானீ'—புகழனைத்தும் அல்லாஹ்வுக்கே. அவனே எனது மர்மஸ்தலத்தை மறைக்கின்ற ஆடையை அணிய வைத்தவன். இன்னும் அவனின் பொருட்டாலேயே மக்களைவிட்டும் தேவை யாவதைவிட்டுத் திருப்தியடைவேன். அந்த அல்லாஹ் நாடினல் என்னை நிர்வாணியாக் கிவிடுவான்—என்று ஓதிக்கொள்ளும், ஏனெனின் இந்த ஆடை உமது மேனி யில் இருக்குந்தோரெல்லாம் அமரர்கள் உமக்காகப் பிழை பொறுக்க விழைகின்றனர்.

நீ காலணி அணிந்தால் வலது கால் கொண்டு துவக் கிக்கொள்க. காலணியை கழற்றுவதானின் இடது காலைத் துவங்குக.

எனக்குப் பின் சில மக்கள் தோன்றுவர். வீட்டு வாயில்கள் சென்று திருமறையை ஓதி அதன் பெயரால் யாசிப்பர். அவர்களுக்கு அழிவுப்பாதைதான் அதிக மாகும்.

•

ஒவ்வொருநாளும் எவர் குர்ஆனிலிருந்து நூறு ஆயத்துகளை ஓதுவாரோ, அந்தப் பகலில் எனது சமுகத்தவர்களெல்லாம் செய்கின்ற நற்கிரியையின் அளவிற்கு அவருக்காகப் பதவியை உயர்த்துகிறான். எவர் ஒவ்வொரு நாளும் நூறு முறை "குல்ஹுவல் அஹத்" என்ற வசனத்தை ஓதுகின்றாரோ, அவருக்காக வானுலகங்களில் இருக்கும் அத்தனை அமரர்களும் பாபமன்னிப்புத் தேடி இறுதி நாள்வரை நல்ல 'துஆ' செய்து கொண்டிருக்கிறார்கள். மேலும் அல்லாஹ் இவருக்காகத் தங்கத்தினால் ஆன கட்டடங்களுள்ள பட்டணத்தையே அமைக்கின்றான்.— இது அத்தனையும் இவர் திருமறையிலுள்ள பிரகாரம் ஒழுகினால்... ...!

நீர் வாகனத்தில் ஏறும்பொழுது, "பிஸ்மில்லாஹி வல்ஹம்து லில்லாஹி ஸுப்ஹானல்லதீ ஸக்—கரலனா ஹாதா வமா குன்னா லஹு முக்ரினீன்" என்று ஓதிக்கொள்க. இதன் பொருள்: 'இறைவனது திரு நாமத்தால்......எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. நாம் இதற்கு நெருங்கக் கூட முடியாதவர்களாய் இருந்த நிலையில் இதை நமக்கு வசப்படுத்தித் தந்த இறைவனையே தூய்மைப்படுத்துகின்றேன்' என்பதாகும். இதை ஓதிக்கொண்டு ஏறினால் அந்த வாகனத்திலிருந்து இறங்குமவரை நீ இறைவனது பாதுகாவலில் இருப்பாய்.

எவர் ஒரு வாகனத்தின்மீதேறிச் செல்லுகையில் ஒரு யூதரையோ அல்லது கிறிஸ்தவரையே கைலாகு செய்தால், அவர் தமது கையைக் கழுகிக்கொள்ளட்டும். முதன் முதலில் அவர்களுக்கு இவர் சலாம் சொல்லத் துவங்க வேண்டாம். அவர்கள் இவர்மீது சலாம் சொன்னால், "உன்மீதும் உண்டாகுக......" என்று மட்டும் பதில் சொல்லிவிடவும் "உன்மீதும் சலாம் உண்டாகுக......" எனச் சொல்லக் கூடாது. அவர்கள் உம்முடைய அண்டை வீட்டுக்காரராய் இருந்தால், அண்டை வீட்டுக்காரர்

என்ற பொறுப்பிற்குப் பங்கமிழைத்திட வேண்டாம். நல்ல முறையில் நடந்து கொள்க.

காசு கொடுத்து நீரை வாங்கியாவது வெள்ளிக் கிழமை ஜும்ஆவுககாக நீர் குளிததுககொள்ளும். ஏனென ருல ஒவ்வொரு நபியையும் ஜும ஆவுக்குக் குளிக்க வேண டும் எனறே இறைவன் கட்டளையிடடுள்ளான. ஜும்ஆவுக் குக் குளிபபது, ஒரு வாரததில் ஏற்படும் பாபங்களுககு பரிகாரம் ஆகும்.

மீசையை நன்கு தரித்துவிடும். அமரர்கள் உம்மை உவந்து உமது இரு உதட்டையும் முததமிடுவர். நீர் தொழுகையில நிறகும்பொழுது தரையில உமது நெறறி வைககும் இடத்தையே நோக்கிக்கொண்டிரும. ‘ருகூஉ’வுக்காகக் குனியும்பொழுது உமது இரு பாதத்தை யும நோககுக. சாஷ்டாங்கம் செய்தால உமது மூககின் அருமபை நோக்கிக்கொள்க. “அததஹிய்யாத்” இருக்கை யில உமது மடியை நோக்கிக்கொளக.

வாசனை பூசிக்கொள்க. வாசனைத் திரவியத்தின் மணம் உம்மீதிருக்கும் பொழுதெல்லாம் உமக்காக அமரர்கள் பிழை பொறுக்கத் தேடுகின்றனர்.

இராக் காலத்தில் துயிலுக்குப் பின் எழுந்து இரண்டு ‘ரக்அத்’கள் தொழுவது, பகலில ஆயிரம் ‘ரக்அத்’கள் தொழுவதைவிடச் சிறந்ததாகும்.

தினமும் தொழுகின்ற ஒருவர் இகபரம் இரண்டிலும் எழிலொழுகும் வதனமுள்ளவராகிவிடுவார்.

உமது ‘குடும்பத்தவர்களைத் தொழுமாறு ஏவிக் கொண்டிரும். உமக்கு ஆகாரத்தின் வாயில்களை அல்லாஹ் திறந்து வைப்பான்.

உம்மால் முடிந்தால் ஒரு 'முஅஸ்ஸின்'—பாங்கு சொல்லுபவராய் ஆகிவிடும். இல்லையேல் நோன்பு நேற்கும் ஒரு இமாமாக இரும். காரணம், உமக்குப்பின் தொழும் அத்தனை பேர்களுடைய கூலி அளவுக்கு உமக்கு நன்மையை அல்லாஹ் எழுதுகிறான். அப்படி நீர் இமாமாக இருக்கும்பொழுது பிரார்த்தனை செய்தால் உம்மை மட்டும் சொந்தப்படுததிக்கொள்ளாதீர். அப்பொழுது நீர் சதி செய்கின்ற இமாமாக ஆகிவிடுவீர். எனவே உமக்காகவும், உமக்குப்பின் தொழுபவர்களுக்காகவும், மற்றெல்லா முஸல்மான்களுக்காகவும் பிரார்த்தித்துக்கொள்க!

உமது இல்லத்தில் 'நபிலா'ன வணக்கங்களைச் செய்து கொள்ளும். உமது பிரகாசம் விண்மீன்களின் சுடரைப் போன்று ஆகிவிடும்.

நீர் தொழுதால் உமது தொழுகையில் உமது துணி கொண்டு விளையாட வேண்டாம். ஷைத்தான் விரல்களுக்கும் கைகளின் இடுக்குகளுக்கும் மத்தியில் ஒருவனாக நுழைந்து கொள்ளுகிறான்.

எவர் தொழுகையில் ஈடுபடும் பொழுது தமது இடது கரத்தின்மீது வலக்கரத்தை வைக்கின்றாரோ, பக்தியோடு நிற்கின்றாரோ அவரை அச்சமுள்ள பக்தர்களில் எழுதப்படுகிறது.

நிச்சயமாக அல்லாஹ் மறுமை நாளில் மு..மின், காபிர் அனைவரையும் எழுப்புவான். அவ்வனைவரும் அச்சமும் நடுக்கமும் கொண்டவர்களாகத் தங்கள் வலது கரங்களை இடது கரங்கள்மீது வைத்தவர்களாய் வருவர்.

நோன்பு நோற்கும் பொழுது இரவு சுமார் மூன்று மணிக்கு 'சஹர்' உணவு அருந்திக்கொள்ளும். நிச்சயம்

அவ்வாறு 'சஹர்' செய்வதிலே ஆயிரம் 'பரக்கத்'களும் ஆயிரம் 'ரஹ்மத்'களும் இருக்கின்றன.

நீர் ஒரு குழுவினருக்கு இமாமாக நின்று தொழவைத்தால் தொழுகையை நீட்டவேண்டாம். அப்படிச் செய்தால் உம்மைப்பற்றி அல்லாஹ் அவர்களுக்குக் கோபம் உண்டாகும் வகையில் வைத்துவிடுவான. நடுத்தரமாக சுருக்கித் தொழவைத்தால், உம்மீது அவர்களுக்குப் பிரீதியை உண்டுபண்ணிவிடுவான். ஏனென்றால் அவர்களில் முடியாதவர்களும் வயோதிகர்களும் இருப்பார்களல்லவா?

உம்மைவிட பக்தியில் குறைந்தவர்கள் பக்கம் நோக்க வேண்டாம். உமது ஆத்மாவுக்குச் சோம்பலை உண்டு பண்ணநேரிடும். பக்தியில் உம்மைவிடச் சிறந்தவரைக்கவனியும். உம்மைவிடப் பணம் நிறைந்தவரைப் பார்க்காதீர். ஆனல் ஒரு நாளைக்குக்கூட உண்ண ஆகாரமின்றித்தவிப்பவரைக் கவனிப்பீராக. அவர்தான் உண்மையில் அல்லாஹ்வுக்கு நன்றியாய் நடப்பவர்.

பெருநாள் தினத்திலே மக்களின் வதனங்களை நோக்கும்! அவர்களது கன்னங்களெல்லாம் பொலிவுடன் தென்படுகிறதல்லவா? ஆனல் இதே பொலிவுமிக்க கன்னங்களையும் மினுக்கும் மேனிகளையும் தான் மண்ணறையிலே புழுபூச்சிகள் மென்று தின்னும். ''ஜஹன்னம்'' என்னும் தீக்குண்டத்தையும், மரணத்தையும் அகிலத்தவர்மீது 'ரஹ்மத்'—கருணையாகத்தான் அல்லாஹ் படைத்திருக்கிருன். மரணம் என்பது இல்லாவிட்டாலதான் தாங்களே கடவுள் என்று வாதித்திடுவரே மக்கள்! 'ஜஹன்னம்' இல்லாவிட்டால, அல்லாஹ்வுக்குத் தலைகுனிநது சாஷ்டாங்கம் செய்வரா அவர்கள்...!

நிராகரிக்கின்ற காபிர்களது கிரியைகள் அல்லாஹ்விடத்தில் அற்பப் பொருளாகும். அவற்றிற்கு அல்லாஹ்

விடம் மதிப்பேது? இறைவன் சில மக்களைப் பற்றித் திருப்திப்பட்டு அவர்களைத் தமது சேவைக்கென அழைத்துத் தமது வழிப்பாட்டில் ஈடுபடுத்துகிறான். சில மனிதர்கள்மீது சினமடைகிறான்; அவர்களை தனது 'ரஹ்மத்'' உடைய வாயிலைவிட்டும் விரட்டியடித்துப் பாபக் கருமங்கள் கொண்டு அவர்களை சோதிக்கிறான். ஆனால் அல்லாஹ்விடம், மிகைக்கும் ஆதாரம் இருக்கிறது. அவன் நினைத்தால் உங்கள் அனைவரையுமே நேர்வழியிலாக்கிவிடுவான்.

மரண வியாதியில் படுத்துக் கிடக்கின்றவர்களிடம் நீர் சென்றால் ''கலிமா ஷஹாதா''—சாட்சி மந்திரத்தை அவர்கட்குச் சொல்லிக்கொடும். அது அவர்களது பாபத்தை அழிப்பதாய் உள்ளது.

''லா இலாஹ இல்லல்லாஹு வ ஹ்த ஹூ லா ஷரீக லஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து யுஹ்யீ வ யுமீத்து வஹுவ ஹய்யுன் லாயமூத்து பியதிஹில் கைரு வஹுவ அலா குல்லி ஷைஇன் கதீர்'' என்று ஓதுவதன் மூலம் காலையிலும் மாலையிலும் உமது இஸ்லாத்தைத் தூய்மைபடுத்திக்கொள்ளும். இதன் பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறெந்த இறைவனுமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை இல்லை. அரசு அவனுக்கேவுள்ளது. புகழும் அவனுக்குத்தான். உயிர்ப்பிப்பான். மரணமடையச் செய்வான. அவன் நிரந்தர ஜீவனுள்ளவன். மரணிக்கவேமாட்டான். அவனது கரத்திலேயே நல்லது இருக்கிறது. அவன் சகல வஸ்துவின் மீதும் திறன்மிக்கோன்.

இதை எவர் ஒரு நாளைக்குப் பத்து முறைகள் படிக்கின்றாரோ, ஒரு முஃமினான அடிமையை உரிமைவிட்ட கூலியை அல்லாஹ் அவருக்காக எழுதுகிறான்.

வெள்ளிக்கிழமை ''ஜும்ஆ'' தொழுது முடிந்துவிட்டால், 'அசர்' தொழுகையின் நேரம் வரும் வரை நீர்

பள்ளியிலேயே தங்கி இரும். .ஏனென்றால் எவர் பொறுமையுடன் இவ்வாறு செய்வாரோ அவருக்காக, ஹஜ்ஜுச் செய்த நன்மையையும், நான்கு அடிமைகளை உரிமைவிட்ட கூலியையும் அல்லாஹ் குறித்து வைக்கின்றான்.

என் மீது "சலவாத்து" ஓதுவதை, உமது வணக்கங்களில் மூன்றிலொன்றாக வைத்துக்கொள்ளும். ஏனெனில் அப்படி சலவாத்து ஓதுவது, அகமும், பெருமையும் இல்லாத வணக்கங்களைச் சார்ந்ததாகும்.

எதாவது ஒரு பாவம் உம்மால் நிகழ்ந்துவிட்டால் உடனே அப்பாபச் செயலுக்காகத் தண்டனை எழுதப்படுமுன் எதாவது தர்மம் செய்துவிடும்! உமது பொருளை உமது மனைவியின் கரத்திலோ உம் மக்கள் கரங்களிலோ ஒப்படைத்துவிடவேண்டாம். ஏனென்றால், "அல்லாஹ் உங்களுக்குச் சாதனமாய்த் தந்துள்ள உங்கள் பொருள்களை, குறைந்த அறிவு படைத்தவர்களிடம் கொடுத்துவிடவேண்டாம்!" என்று இறைவன் கூறி இருக்கிறான். குறைந்த அறிவு படைத்தவர்கள் என்று இறைவன் குறிப்பிட்டது மனைவியையும், மக்களையுமாகும்.

மூஃமினான ஒரு மனிதன் மென்று விழுங்குகின்ற பொருள்களிலேயே அல்லாஹ்வுக்கு மிக உகப்பானது, தன்னிடம்சக்தி இருக்க கோபத்தை மென்று தின்பதாகும்.—அடக்கிசாந்த நிலை அடைவதாகும்.

உமது மனைவியின் குறைகளை நாளொன்றுக்கு எழுபது முறைகள் மன்னித்துவிடும். அவ்வளவு உம்மால் பொறுக்க முடியாவிட்டால் பதினேரு தடவைகள் மன்னியும். உமது

பணிமகன்—அடிமையின் தவற்றை இருபது முறைகள் புறக்கணித்துவிடும். காரணம், பணி மகனும், மனைவியும் உமது சக்தி கண்டு அஞ்சுபவர்களாவர்.

ஒரு மானிடன் ஹராமான பொருளைப் புசித்து விட்டு, இறைவனிடம் மன்னிக்கப் பிரார்த்தித்தால், அப்பொழுது அல்லாஹ் இவனை நோக்கி "அறிவற்றவனே! ஹராமான பொருளை விட்டு முதலில் உன் வயிற்றைச் சுத்தப்படுத்து. பின்னர் என்னிடம் பிரார்த்தி..." என்று சொல்லுகிறான்.

எவர் 'ஹலால்'ான ஆடையை அணிந்திருக்கிறாரோ —அதை தைத்திருக்கும் நூலோ ஹராமானது—அவரது வணக்கத்தை அல்லாஹ் ஒப்புக்கொள்ளமாட்டான். அந்த ஆடை அவரது மேனியை அலங்கரிக்கும் பொழுதெல்லாம் அவரது பிரார்த்தனையையும் ஏற்றுக்கொள்ளமாட்டான்.

எவர் ஒருவர் ஒரு நாளைக்கு ஒரு பொய் வீதம் நாற்பது நாட்களுக்குப் பொய்யுரைப்பாரோ, அல்லாஹ்விடம் அவரைப் பொய்யர்களில் ஒருவராக எழுதப்படுகிறது. எவர் நாற்பது நாட்களுக்கு ஒரு பொய்யேனும் இயம்பவில்லையோ, அவரை அல்லாஹவிடம் மெய்யர்களின் பட்டியலில் எழுதப்படுகிறது. அமரர்களின் தலைவராம் ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னிடம் அறிவித்துள்ளார்கள்: "அபூ பக்ர் (ரலி) அவர்கள் இஸ்லாம் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் அறவே பொய்யுரைத்ததில்லை. உமர் (ரலி) அவர்கள் ஹலாலான பொருள்களிலேயே மூன்றில் இரண்டு பாகத்தை ஒதுக்கிவைத்துவிட்டார்கள், ஹராமில் ஈடுபட்டு விடுவோமோ என்ற அச்சத்தால். உஸ்மான் பின் அப்பான் (ரலி) அவர்கள் சூரிய வெளிச்சத்திலும் சரி, சந்திர ஒளியிலும் சரி தங்கள் இன உறுப்பைத் திறந்

ததே இல்லை. இறைவனில் நின்றும் வெட்கிய காரணத்தால்...

அலி (ரலி) அவர்கள் தங்களது இன உறுப்பையோ, பிறருடைய வெட்க ஸ்தலத்தையோ பார்க்க வேண்டுமென முகம் திருப்பியதுகூடக் கிடையாது. அவர்கள் பெயரை உச்சரிக்கையில் ('கர்ரமல்லாஹு வஜ்ஹஹு'—அவர்களது வதனத்தை அல்லாஹ் சங்கையாக்கிவிட்டான்.—என்று சொல்லுவதற்கு இதுவும் ஒரு காரணமாகும்). ஒரு முஸ்லிமோ, காபிரோ தங்களது வெட்க ஸ்தலங்களைத் திறப்பதற்கு அல்லாஹ் அனுமதிக்கவே இல்லை.—என்றுதான் இறைவனைத் தொட்டும் ஜிப்ரீல் (அலை) எனக்கறிவித்துள்ளார்கள்.

மலர் வதனத்துடனும் பிறர் குற்றம் களைபவராயும் நீர் இருந்துகொள்ளும். மலர் வதனத்தினரையே நான் நேசிக்கிறேன். கொடும் நாவினராய்ச் சமைந்திடல் தகாது. அவ்வாறிருப்பது இறைவனுக்கே பிடிக்காத செயலாகும். மக்களுக்கு எனது வழிமுறைகளைப் பற்றிப் போதனை செய்வீராக. அப்பொழுது அலலாஹ் உமக்கு எழுபது நபிமார்களது நனமையினை எழுதுவான்.—இப்படி நபிகள் பிரான் நவின்றபொழுது இடைமறித்து அபூஹுறைரு கேட்டார்கள்: "உங்களது வழி முறைகள் என்றால் என்ன?" விடையிறுத்தார்கள், நபிகள் திலகம்: தொழுகைக்காக நின்று "தக்பீர் தஹ்ரிமா" கட்டுகையில் உமது இரு கரங்களையும் உமது காது வரை உயர்த்திச் சென்று நெஞ்சுக்குக் கீழாக அவ்விரண்டையும் கொண்டு வந்து இடக கரத்தின்மீது வலக கரத்தை வைப்பதும், எனது குடும்பத்தவரையும் எனது சகாக்களையும் நேசிப்பதும், அல்லாஹ்வுக்கு இணை கற்பிக்காமலிருப்பதும், திருமறை, இறைவனது வாசகமாய் இருப்பதால் அதில் ஐயங்கொள்ளாதிருப்பதும், மரணம் வருகின்ற வரை "ஜும்ஆ"வையும்,

ஜமாஅத்துடன் தொழுவதையும் கைவிடாதிருப்பதும் எனது வழி முறைகளாகும்.

எனக்குப் பின்னர் ஒரு காலம் வரும். அக்காலே ஒவ்வொருநாளும் சிறிது சிறிதாக எனது "சுன்னத்"— வழிமுறை மறைந்து கொண்டு செல்லும். சிறிது சிறிதாக "பித்அத்"—மார்க்கத்திலில்லாத புதிய விஷயம்—வளரும். மக்கள் அதே நிலேயில் நீடித்து விடுவர். கடைசியாய் "பித்அத்" தை உடையவர்கள் "சுன்னத்"தைச் செயல் படுத்துபவர்களேவிட மிகைத்துவிடுவர். அவர்களுக்கு மத்தியில் "முனுபிக்"—உள்ளொன்று வைத்துப் புற மொன்று பேசுபவனே மதிப்பிற்குரியோனுய் ஆகிவிடுவான். மு:மினுன விஸ்வாசியோ தாழ்த்தப்பட்டுவிடுவார். பெண் குலம் பெருகும்; ஆண் குலம் குறுகும். ஒரு ஆண் மக னின் பொறுப்பில் சுமார் ஐம்பது பெண்கள் வரை இருக் கும் நிலே ஏற்பட்டுவிடும்.

எனக்குப் பின்னர் காலம் கஷ்டமுடையதாயும் மார்க்கம் பின்னேக்கிச் செல்லுவதாயும், மக்கள் கருமிகளா யும், "பித் அத்" வலுத்ததாயுமே ஆகிவிடும்—மாறிவிடும். ஒரு மனிதன் தனது அயல் வீட்டுக்காரனின் துன்புறுத்தல் கண்டு அஞ்சுவான; ஒரு நண்பன் தனது நண்பனின் துஷ் டச்செயலுக்குப் பயந்து அவன் விரும்பும் வகையில் நடக்க வேண்டி ஏற்பட்டுவிடும். மகன் பிதாவை எள்ளி நகைப் பான். ஒருவனுக்குத் தனது தோழனின் சதிச் செயல் பற்றி நிர்ப்பயமாய் இருத்தல் சாலாது. உமது வாழ்நாளி லேயே இத்தகைய ஒரு காலம் வந்து விட்டால், வனம் நோக்கித் தனித்துப் புறப்பட்டு விடும். அல்லாஹ் உமக்கு மகிழ்வளிக்கப் போதுமானவன்.

நான் உமக்குக் கற்றுத் தந்தவைகளில் அல்லாஹ் வுக்கு மிக உகப்பானதும் உமக்கு மிக பயன் விளேக்கத்

தக்கதும் ஏழைகளுக்கு அன்னமிடுவதும், 'ஜமா அத்'தில் சேர்ந்து தொழுது கொள்ளுவதுமாகும்.

பேசாதிருப்பதில் பொறுமையைக் காட்டும்; வெற்றி உமக்கே! அல்லாஹ்வை மிக 'திக்ரு' செய்துகொள்ளும். அதிகப் பலன் காண்பீர்!

'ஜமா அத்'தாகத் தொழுதற்கென்று நடந்து செல்லுபவனைவிட, 'க:பா' ஆலயம் நோக்கி நடப்பவன் சிறந்தவனல்லன்!

எவர் பிற முஸ்லிமான நண்பரின் தேவையைப் பூர்த்தி செய்வதற்கென்று செல்லுகின்றாரோ அவரின் தேவைகளைத் தீர்த்துவைக்க அல்லாஹ் போதுமான உபகாரியாய் ஆகிவிடுகிறான்.

எவர் ஒருகுருடரின் நாட்டப்படி அவரை வழிநடத்திச் செல்லுவாரோ, அவரது ஒவ்வொரு பாத அடிக்காகவும் நாற்பது நன்மைகளை அல்லாஹ் எழுதி நாற்பது பாபங்களைக் குறைக்கிறான். எவர் ஒரு கபோதியைப் புரளி பண்ணுதற்காக அவரது எண்ணத்திற்கு மாறான இடத்திற்கு அழைத்துச் செல்லுகின்றாரோ, அவரை அல்லாஹ் ஒரு ''ஹுக்பு'' நரகக்கைதியாக்கி விடுகின்றான். என்று திருநபி (ஸல்) விளக்கினார்கள், உடனே அபூஹுறைரு கேட்டார்கள்: "என்பெற்றோர்கள். உங்களுக்காகப் பிணையாவாராக! ஒரு 'ஹுக்பு 'என்பது என்ன?" என்று.

விடையிறுத்தார்கள், நபிகள்நாதர் இப்படி:

" ஒரு 'ஹுக்பு' என்றால் எண்பது மாதங்களாகும்; ஒருமாதம் என்பது எண்பது நாட்கள் கொண்டதாகும். ஒரு நாள் என்றால் எண்பது மணி நேரமுள்ளதாகும்.

ஒருமணி என்பது உலகத்து ஆண்டுகளில் ஒரு ஆயிரம் வருடங்களைப்போன்றதாகும்.''

தவறியவருக்கு வழிகாண்பியும்! அறியாதவருக்குக் கற்றுக் கொடும்! அப்போது உமக்காக அல்லாஹ், மார்க்கப் போர் செய்து வீர மரணமடைந்தவருடைய நன்மையை எழுதிவைக்கிருன்!

•

பாபச்செயலை குறைத்துவிடும். பிறர் தவற்றை மன்னித்துவிடும். பிறர் குறையை மறைத்துவிடும். அப்போது உமது குறைகளும் பிறரால் மன்னிக்கப்படும்படி அல்லாஹ் செய்துவிடுவான்.

விருந்தினரை உபசரித்துக்கொள்வீராக! விருந்துபசாரத்தில்தான் 'பரக்கத்'தும் சுவனம் புகும் வழியும் இருக்கிறது.

ஒருமனிதர் மீது இறைவனது கோபம் கடினமாகிவிட்டால், விருந்தினரும் யாசகர்களும் அவரிடம் போகாது திருப்பிவிடுகின்ருன்.

இறைவனது விதிபற்றியே தர்க்கிப்பவர்களிடம் தர்க்கத்திற்குச் செல்லாதீர்! ஏனெனில் அவர்களது இதயங்களை இறைவன் சத்தியத்தை விட்டுத் திருப்பிவிட்டான். இறை மார்க்கத்தைப் போதிப்பதில் பழிப்பவர்களது பழிச்சொல் உம்மைப் பயங்காட்டிவிடவேண்டாம்.

விசனித்திருப்பவர்களுக்கும், துன்பத்தில் சிக்குண்டவர்களுக்கும் ஆறுதல் சொல்லும்! மகிழ்வுண்டுபண்ணும்! உலகத்திலுள்ள உமது விசனங்களை, மறுமையிலுள்ள துன்பங்களை அல்லாஹ் தூரப்படுத்துவான்.

ஒரு கல் நடப்பீராக! வியாதியஸ்தரை சந்திக்க! இரண்டு கல் செல்லும்; சண்டையிட்டுக்கொண்ட இரு வருக்கும் மத்தியில் இணக்கமுண்டு பண்ண! மூன்று கல் போய் உமது சோதரனைத் தரிசியும்! ஆறு கல் நடந்து அறிவு கற்றுக்கொள்ளும்!

ஒரு முஸ்லிம் பிற முஸ்லிமின் அபகீர்த்தியை—மான பங்கத்தை நாடினால், அவனை அல்லாஹ் இகபரம் இரண் டிலும் பங்கப்படுத்துவான். ஆதாரம்: ''மு:.மின்களிட மிருக்கும்பங்கத்தைப் பரத்த ஆசிக்கின்றவருக்கு, இகபர மிரண்டிலும் கொடிய வேதனை இருக்கிறது.'' என்று இறைவன் இயம்புகிறான்.

உம்மை எவரேனும் சந்திக்க வந்தால் அவரை சங் கைப்படுத்தும்!

உமது குறையைப் பிறர் சொன்னாலும் அவர் குறையை நீர் சொல்லாதீர்!

ஒரு முஸ்லிமைச் சந்தித்தால் ''அஸ்ஸலாமு அலைக் கும்'' என்று கூறும்! இறைவன் உமக்கு முப்பது நன்மைகளை எழுதுகிறான்.

எவர் ஒரு முஸ்லிமான நண்பர் பற்றிப் புறம் கூறு வதை விட்டுவிடுவாரோ, அல்லாஹ் அவரைவிட்டு எழுபது ஆபத்துகளைத் தடுத்து, விரோதிகளின்மீது வெற்றியளிக் கிறான்.

மக்கள் குறை பற்றிக் கருதாதீர்! மானிட இனத்தி லேயே மிகக் கெட்டவன் மக்கள் குறையிலேயே கண் வைப்பவனாவான்.

எக்காரியத்திலும் துரிதப்படாதீர்! அவசரப்படுவது ஷைத்தானின் காரியமாகும். ஆனால் ஐந்து விஷயங்களில் துரிதப்படலாம். ஒன்று, விருந்தினருக்குத் துரிதமாய் உணவளிப்பது. இரண்டு, கடன் அடைப்பது. மூன்று, பாப மன்னிப்புத் தேடுவது. நான்கு, இளம் பெண்ணை பருவம் வந்ததும் விவாகம் செய்து கொடுத்து விடுவது. ஐந்து, இறந்த சவத்தை நல்லடக்கம் செய்வது.

யாரிடமிருந்து கல்வி பயின்றீரோ அவருக்கு அடங்கி நடந்துகொள்ளும்! அப்படிச் செய்பவருக்குக் காரியம் கைகூடச் செய்து அல்லாஹ் அவரைக் கௌரவிக்கிறான்.

உபதேசம் பெறுவது இதயத்தைவிட்டு கடினத் தன்மையைக் கழற்றி விடுகிறது. மழைத்துளி பாறை மீதுள்ள புழுதியைக் கழுவிவிடுவதுபோல்...

ஒரு மனிதனுக்கு இறைவனது கிருபையால் பெரும் பதவி கிட்டி இருக்கும். தனது அறிவாற்றலால் அதைப் பெற்றிருக்கமாட்டான். அப்பொழுது அல்லாஹ் அம்மனிதனைப் பல வேதனைகள், நோக்காடுகள் கொண்டு சோதிப்பான், உயர்ந்த பதவியை இன்னும் பெறட்டும் என்று!

இறந்த சவத்தை உமது கரத்தால் குளிப்பாட்டும்! உமது பாபங்களை உம்மை விட்டு இறைவன் கழுவி விடுவான். சவ ஊர்வலத்திலே நீர் கலந்துகொள்ளும்! உமக்கு "உஹத்" மலை அளவுக்கு கூலியை அல்லாஹ் அதிகப்படுத்துகின்றான்.

ஒரு மனிதன் ஏழையாகவும் இருக்கின்றான். பிறரிடம் மார்க்க விஷயமாய் எதுவும் கேட்டு விளங்குவதுமில்லை என்றிருந்தால் அவனது இதயமே மரணமாகிவிடுகின்றது. எவன் நாற்பது நாட்களுக்கு அறிஞர்களிடம்

அமர்ந்து அவர்களது நல்லுரைகளேயும் கேட்கவில்லேயோ நிச்சயம் அவனது இதயம் வன்னெஞ்சமாகி மரணம் அடைகிறது. காரணம், அறிவென்பது இதயங்களுக்கு ஜீவனும், ஜோதியுமாகும். இதயமோ மண்ணில்பட்ட இரும்பு துருப்பிடிப்பதுபோல, துருவேறக்கூடிய வஸ்துவாகும் என்று பெருமானுர் விளக்கியபொழுது "இதயத் துரு கழற்றும் பொருள் எது?" என்ற விஞ ஒன்று எழுநதது. விடையிறுத்தார்கள் நபிகள் திலகம்: "அறிவரங்கில் அமருவது!"—என்று.

எவர் இவ்வுலகில் பாபக் கருமத்தினின்றும் ஒதுங்கி ஓடுகிருரோ மறுமையில் அவரை விட்டு—நரகக் குண்டம் வெருண்டோடும். எவர் பாபச் செயலில் விரைந்து ஈடுபடுகிருரோ, மறுமையில் இவரது எதிரில் வந்து வரவேற்க அது மகிழ்வோடு இருக்கும்.

"ஜிப்ராயீல்", "மீக்காயீல்' போன்ற அமரர்களது வணக்கத்தளவு நீர் வணங்கியபோதும், நீர் ஒரு மூஃமினே, மார்க்க விஷயமாய் நேசித்து, மார்க்க விஷயமாய்க் கோபிக்கின்றவரை உமது நற்கருமங்கள் ஏற்றுக்கொள்ளப்படா.

உமக்கு நான் "வசிய்யத்து"—உறுதிமொழி சொல்லுகிறேன்: இறைவனேத் தவிர பிறர் எவர் மீதும் நம்பிக்கை வைக்கவேண்டாம். நேர்வழியில் சேர்த்துவிடும் ஆற்றல் என்னிடமில்லே. நானே விஷயத்தைப் பிறர் அளவில் சேர்த்துவிடும் ஒரு தூதனுவேன். நேர்வழியின் பக்கம் சேர்த்து வைத்துவிடும் உரிமை என்னிடம் இருந்தால், உலகில் இருப்பவர் அனேவரும் முஸ்லிம் ஆகிவிடுவர்.

மேலும் இப்லீஸ் இருக்கின்ருனே அவனின் சேவையோ, மார்க்கத்தில் கூடாத பொருளை மெருகேற்றிப் பகட்டாகக் காட்டுவதும், வீண் ஊசாட்டங்களை மனத்தில் போடுவதும்தான். வழிகெடுக்கும் ஆற்றல், உரிமை அவனது கரமிருந்தால், இவ்வுலகத்தில் ஒருவர்கூட "லாயிலாஹ இல்லல்லாஹு" என்று உச்சரிக்கக்கூட விட்டிருக்கமாட்டான். எனவே நண்பரே! உமது சொந்த நோக்கத்தை ஸ்திரப்படுத்தி முயற்சிக்குமேல் முயற்சி செய்துகொண்டே இரும். மக்களில் எவரின் மீதும் நம்பிக்கை கொள்ள வேண்டாம்.

உணவு உண்ணப் போகு முன்பும், உணவு உண்ட பின்பும் உப்பை எடுத்து வாயில் வைத்துக்கொள்ளும்! அப்படிச் செய்வதால் உமக்கு எழுபது அபாயங்களிலிருந்து பாதுகாவல் இருக்கிறது. அவ்வெழுபது அபாயங்களில் மிகவும் இலேசானது வெண்குஷ்டமாகும்.

(அரபு நாட்டில் விளைகின்ற) "ஸய்த்தூன்" எண்ணெயை உட்கொள்வீர்! மேனியிலும் தடவிக்கொள்வீர்! அப்பொழுது உமது உடல் உஷ்ணத்தாலோ, அதிகக் குளிர்ச்சியாலோ பாதிக்கப்படாது.

ஒரு மு॰ஃமின்: அவனுல் பிறருக்குத் துன்பமில்லை என்று மக்கள் நிர்ப்பயமாகின்றவரை அவன உண்மை விசுவாசியாகமாட்டான். வேண்டுமென்றே தொழுகையை விடும்பொழுது அவன் "காபிர்" ஆகிவிடுகிறுன. விதி என்ற முன்னேற்பாட்டைப்பற்றி வீண் தர்க்கம் புரியும் பொழுது "முனுபிக்"—கபட சித்தமுள்ளவனுகின்றுன். பிராயச்சித்தம் தேடும் ஒருவன், முன்பு பாபத்தில் சுவை கண்டது போல் இப்பொழுது பக்தியின் இனபத்தைச் சுவைககின்றவரை, உண்மையில் பாபப் பரிகாரம் தேடியவனுகான.

ஒரு பக்தன் பக்தனுக முடியாது, தான் பயின்ற கலை யின் மூலம் துறவறத்தைக் காணுகின்றவரை. ஒருவன் தனது இரகசியத்தை எல்லோரிடமும் கூறும் பொழுது அறிவீனன் ஆகின்றுன். ஒருவன் தனது வயிற்றை நிரப்பு வதற்காகப் பொருள் செலவு செய்யும் பொழுது சபலப் புத்தி யுள்ளவனுகிறுன். தற்புகழ்ச்சிக்கென்று கிரியை புரிபவன் அகங்காரம் படைத்தவனுகின்றுன்.

எத்தனையோ இன்ப சுகங்கள், அதை அனுபவிப்பவ னுக்கு நீண்ட துக்கத்தை உண்டு பண்ணுகிறது. எத்த னையோ நல்ல வார்த்தைகள் தரித்திரத்தையே தூரப்படுத்தி விடுகிறது.

உமது எல்லாக் கருமங்களிலும் உமது மன இச்சை யைத் தொடராதீர். அப்படி தம் மன நோக்கிற்குக் கட்டுப் படுபவர் தமக்கு அழிவுப் பாதையை உண்டாக்கிக் கொண் டார்.

எவரிடம் எல்லாப் பொருள்களிலும் ஆசை அதிகமாகி விடுகிறதோ அவரிடம் திருப்திநிலை குன்றிவிடும்.

ஹலால், ஹராம் இன்னதெனப் பகுத்துணரும் அறிவு அற்றவன் புத்தி கெட்டவன் என்று தான் சொல்ல வேண்டும். மறுமையிலுள்ள தராசில் கனக்கக்கூடிய நன்மை என்ன என்றுல் அது நற்குணம் தவிர வேறு எதுவு மில்லை.—இப்படி திரு நபி அவர்கள் விளக்கியபோது, "இறை தூதே! நற்குணம் என்றுல் என்ன?" என்று நான் கேட்டேன. பெருமானுர் விடை பகன்றுர்கள்: "நற்குணம் என்பது தயாளமும், பெருந்தன்மையும், உமக்கு அநீத மிழைத்தவருக்கு மன்னிப்பளிப்பதுமாகும்!"

நீர் அல்லாஹ்வுக்காக ஆகிவிடும், அல்லாஹ் உமக் காக ஆகிவிடுவான். இறைவனுக்காகப் பணிபுரியும், தகுந்த கூலி வழங்குவான் அவன்.

எக்கருமங்களிலும் பிறரைக் கலந்து ஆலோசிப்பது தான் நேரான முறை. பிறரிடம் யோசனை பரிமாறிக் கொள்ளாதவன் நஷ்டமடைவது சர்வ நிச்சயம். தன் யுக்தியே தனக்குப் போதுமெனக் கொள்வோன் தவறியே போவான். மககளிடம் தலைநிமிர்ந்து நடப்பான், இழிவு தான் அவனது முடிவு.

ஒருவரை நேசித்தால் அவரது குணத்தையும் குலத்தையும் கவனித்துக் கொள்ளும். இல்லையேல் ஏமாற்ற மடைவீர்!

நீர் ''உலூ''—மார்கக சுத்தி செய்யும் பொழுது உமது முகத்தில், தண்ணீரை அள்ளிக்கொட்டி நலல முறையில்கழுவிக்கொள்ளும் 'முனபிக''குகள் தங்கள் வதனங்களைத் தண்ணீரால் தொட்டுத் தடவுவார்கள். தலையில் துண்டு போட்டுக்கொண்டு தொழுதால் நெற்றி, வாய், தாடிப் பகுதிகளைத் திறந்து கொள்ளும். தொழும்பொழுது இமாமை முந்த வேண்டாம். முநதினல் இறைவன் உமது தொழுகையைக் கூடாமலாக்கிவிடுவான. ஜமா அத்தாய்த் தொழும்பொழுது அணி—வரிசைக்குப் பின் னல் தனியாய் நின்று தொழ வேண்டாம்.

இவ்வுலகில் இறைவன் உமக்கு நிறைந்த செல்வத்தைத் தந்துவிட்டால், நல்ல காரியங்களில் அவற்றைத் தாராளமாய்ச் செலவிடும்!

எந்த வியாதிக்கும் மருந்து செய்தால் கருஞ்சீரகத்தை உபயோகிப்பதைக் கடைப் பிடியும். மனிதனை மரணத்தை விட்டும் பாதுகாக்கும் பொருள் ஒன்று இருப்பதாய் வைத்துக்கொண்டால் அதைக் கருஞ்சீரகம் என்று சொல்லுவது பொருந்தும்—அவ்வளவு விசேஷமான மருந்து.

ஒருமனிதர், ஆயிரம் ஆண்டுகள் ''நூஹ்'' நபி வணங்கினதுபோல் வணங்கினலும் அவரிடம் மூன்று தன்மை

கள் பிரதிபலிக்காதவரை அவ்வணக்கம் அவருக்குப் பயன் தராது. ஒன்று மார்க்கக் கல்வி கற்பது. இரண்டு நடுத் தரச் செலவு மூன்று பாபக காரியங்களை விட்டு ஒதுங் கும் அளவிற்குப் பேணுதல்.

இறைவன் ஒரு மனிதரை நேசித்துவிட்டால் அவ ருக்கு மார்க்க ஞானத்தை விளங்கச் செய்கிறுன். உறு திப்பாட்டின் மூலம் வலுவுண்டு பண்ணுகிறுன். போதிய உணவும் அளித்து தூய ஆடையையும அணிவிக்கிறுன். ஒரு மனிதனின அழிவை இறைவன் நாடிவிட்டால் நேரிய வழியினின்று விலகச் செய்கிறுன். பொருளாசையை உண்டுபண்ணுகிறுன். குழந்தை குட்டிகளை அவனுக்கு அதிகப்படுதகிவிடுகிறுன். உலகமாயையிலேயே சிக்கவைத்துவிடுகிறுன். இறைவன் தன் அல்லாத மறறவர் பக்கம் அவனுக்குத் தேவையை உண்டுபண்ணி விடுகிறுன்.

இறைவனுக்காக மனிதன் செய்ய வேண்டிய கடமை இருக்கிறது, அது இவன் பாபம் செய்யாதிருப்பது. மனி தனுக்காக இறைவன் செய்ய வேண்டிய கடமை இருக் கிறது! அது மனிதன் மன்னிப்புக்கோரின் அதை ஏறறுக் கொண்டு அவனைச் சுவனம் பிரவேசிக்கச் செய்வது.

பக்தியின் கரு, மார்க்கத்திலே தடுக்கப்பட்டவற்றை விட்டுவிடுவது; உம்மீது இறைவன் விதித்த விதிகளை ஆற்றி முடிப்பது.

நான் சொல்லாத எதையும் மக்களிடம் நான் சொன்ன தாய்ப் பொய் சொல்லாதீர். ஏனெனில் என்மீது பொய்யு ரைத்தவன், இவ்வுலகிலிருக்கும்பொழுதே தனக்காக நர கத்திலுள்ள இடத்தைப் பார்ததுக்கொண்டுதான் இவ்வு லகை நீத்துச் செல்வான்.

ஒவ்வொரு நாளின் அதிகாலையிலும், ஒரு மனிதரின் வீட்டு வாயிலின் வலப்புறத்தில் ஓர் அமரர்-வானவர்

வருகின்றார். அவரது கரத்தில் கொடி ஒன்றிருக்கிறது. அவ்வீட்டு வாயில் இடப் பக்கத்தில் ஷைத்தான் வருகிறான், அவனும் தனது கரத்தில் கொடியொன்று வைத்திருக்கிறான். அவ்வில்லத்து மனிதர் வெளியில் புறப்படும்பொழுது வலக் காலை முன்வைத்து ''பிஸ்மில்லாஹி ஆமன்து பில்லாஹி வ தவக்கல்த்து அலல் லாஹி லா ஹவ்ல வ லாகுவ்வத்த இல்லா பில்லாஹில் அலீயுல் அலீம்'' என்று ஓதிககொண்டு சென்றால், அந்த அமரர் தமது வலக்கரத்தால் கொடியை உயர்த்துகிறார். அம் மனிதர் அன்று பூராவும் ஷைத்தானின் இடர்விட்டகன்று இறைவனது நேர்வழி பெற்றுத் தூயவராகிவிடுகின்றார்.— மாறாகச் செல்லுபவருக்கு இப்லீஸ் உடைய இடர்தான் சம்பவிக்கும்.

(ஹதீஸ் குத்ஸீயில்) அல்லாஹ் அறைகிறான்: மனிதா! நீ பிறர்பால் செலவிடும் அளவுக்கு உன்மீது நான் செலவிடுகிறேன். நீ உனது கரத்தைச் சுருக்கிக கொள்ளும அளவிற்கு உன்மீது நான் சுருக்கிக்கொள்ளுகிறேன். உலகாசையில் உனது உள்ளம் சாய்கின்ற அளவிற்கு உனது இதயத்தைவிட்டு எனது பற்றை அகற்றிவிடுகிறேன். நீ எதைச் செய்கின்றாயோ அதன் இலாபத்தைத்தான் பெற்றுக்கொள்வாய்.

நீர் நோன்பு நோற்பது, சுவன உலக வழியில் மூன்றிலொரு பாகத்தைக் கடக்கச் செய்கிறது. உமது தொழுகை மூன்றிலிருபாகத்தை கழிக்கின்றது. நீர் செய்கின்ற தர்மம் உம்மைச் சுவன உலகிலேயே கொண்டு விட்டு விடுகிறது.

இறைவன் விதிக்கேற்ப உமக்குத் துன்பங்கள் ஏற்பட்டு அதில் நீர் திருப்திப்பட்டால் நிச்சயம் தகுந்த நற்கூலி வழங்கப்படுவீர். அப்படி இன்னல் ஏற்பட்டு, அதைக்கண்டு நீர் அஞ்சி நடுங்கினால் எந்த இலாபமும் அற்றவராவீர்.

பெற்ரேருக்குப் பணிவு காண்பிப்பதைப் புறக்கணிக்காதீர்! பணிவு உமது கடன். ஒரு அறிஞருக்குப் பணி புரிவதை வெறுக்காதீர்! விருந்தினரை உபசரிப்பதில் வேற்றுமை கொள்ளாதீர! நபி இப்ருஹிமை விட நீர் உயர்ந்து விடவில்லை. மன்னனுக்கு மரியாதை செய்வதை மறுக்காதீர்! உம்மீதும் உமது நாட்டவர் மீதும் அரசு செலுத்த, மன்னனை இறைவனே சாற்றியுள்ளான்.

இந்தச் சமூகத்தவர்களில் நான்கு வகையினரே நரகுக்கு முந்திச் செல்லுபவர்கள். ஒன்று திருட்டு வழியில் பொருள் ஈட்டியவன். இரண்டு, செயலற்ற அறிஞன். மூன்று, வியபிசாரத்திலீடுபடுகின்ற கிழவன். நான்கு, வெளிக்குத் தூயவனுய் நடித்து உள்ளிலே கூடாதவற்றைச் செய்கின்ற வேடதாரி. அபூஹுறைரு! இந்தச் சமூகத்தவர்களில் "நஈம்" எனும் சொர்க்கத்திற்கு முதலில் செல்லுபவர்கள் மூவராவர். ஒருவர், பேணி நடக்கின்ற அறிஞர். இரண்டாம் நபர், இறைவனது வணக்கத்திலேயே வளர்ந்த வாலிபர். மூன்ரும் நபர், இறை வழியிலே வாரி வழங்குகின்ற வள்ளல்.

எப்பொருளுக்கும் நுனியும் கூர்மையும் உண்டு; இஸ்லாத்தின் கூர்மையோ தயாளமாகும். எவ்வஸ்துவுக்கும் கிரீடம் உண்டு; இஸ்லாத்தின் கிரீடமோ "லுஹறா" தொழுகை. எல்லாப் பொருளுக்கும் ஜோதி உண்டு; இஸ்லாத்தின் ஜோதியோ "ஜமாஅத்" துடன் தொழுவது. எப்பொருளுக்கும் சுடர் இருக்கிறது; இஸ்லாத்தின் சுடரோ மெய்யுரைப்பது. எந்தப் பொருளுக்கும் அழகு இருக்கிறது; இஸ்லாத்தின் அழகோ பிராயச்சித்தம் செய்வதாகும்.

அறிவு இல்லாதவனிடம் பிராயச்சித்தம் இல்லை. மார்க்கத்தில் ஆவலில்லாதவனுக்கு அறிவு இல்லை. பேணுதலில்லாதானுக்குப் பக்தி இல்லை. "ஜக்காத்" கொடுக்காதவனிடம் தொழுகை இல்லை. கிடைத்ததைக் கொண்டு திருப்திப் படாதவனிடம் உறுதிப்பாடில்லை.

நீர் அங்கங்களால் நற்கிரியை புரியும் பொழுது வான் நோக்கிப் பிரார்த்தனை செய்யும். அப்பொழுது இறைவன் உம்மை அருட்கணகொண்டு நோக்குவான. நீர் எந்த வார்த்தையைப் பேசும் பொழுதும் உமது ஒவ்வொரு வார்த்தையையும் இறைவன் கேட்டுக்கொணடிருக்கிறுன என்பதைச் சிநதனையிலிருத்திககொளவீராக! எதைப் பற்றியும் ஆராயும் பொழுது உம்மைப் பற்றி ஏகவல்லோன் நன் கறிகிருன் என்பதைக்கவனத்தில் கொள்ளும். அகிலத்தவர் களில் எவர் பற்றியும் மறநதவனல்லன் அல்லாஹ்!

இறைவன் தனது திருவசனத்தில் கூறுகிறுன்: "உங்களில் ஒவ்வொருவருக்கும இறைவன் எச்சரிக்கின்றுன். மேலும் என்னளவிலேயே உங்கள் மீட்சி இருக்கிறது. இறைவனது சதிபற்றி நிர்ப்பயமாய் இருக்க வேண்டாம்!" நீர் ஏதாவது கேட்க வேண்டுமாயின் ஏக இறைவனையே கேளும். அவனிடமே முறையிடும். வேறெவரிடமும் கோரிக்கை பற்றிக் கருதவும் கூடாது. அவனிடமே உதவி கோரும். இப்பூமியில் வதிகின்றவர், விண்ணில் வசிப்பவர் அத்தனை பேர்களும் சேர்ந்து இறைவன் நாடாத ஒரு பொருளை உமக்குத் தந்திடலாம் என்று முழு முயற்சியுடன் பாடுபட்டாலும் அது அவர்களால் சாத்தியமே ஆகாது. இறைவனின் நாட்டமில்லாதது உமக்கு ஊறு விளைத்திடலாம் என்று கருதின போதிலும் அதுவும் அவர்களால் முடியவே முடியாது.— அவன் அனுமதியின்றி அணுவும் அசையாது!

நீர் தொழும் பொழுது உமது கண்களை மூடிக் கொள்ள வேண்டாம். உமது கொப்புள் மீது கைகளை வைத்தல் கூடாது. காரணம், இது யூதர்களது செய்கை ஆகும்.

கிரிஸ்தவர்களை இறைவன் ஈஸா நபி மூலம் வழி கெடுத்ததுபோல எனது இந்தச் சமூகத்தவர்களில் ஒரு

பகுதியை அலியிபின் அபீதாலிபைக்கொண்டு வழி கெடுப்பான்.

ஏகவல்லோன் இந்த இஸ்லாமிய மார்க்கத்தைத் தன்னிடம் விசேஷமுள்ளதாய்த் தெரிந்துகொண்டான. இந்த மார்க்கத்திற்காக அமரர்களேயும் நபிமார்களேயும் தேர்ந்தெடுத்தான. இறைவன் தான யார் மீது சினமுற்ருனே அவனுக்கே இந்த உலகத்தை—உலகச் செல்வத்தைக் கொடுப்பான். மார்க்கத்தில் பற்றை, தான் விரும்பியவனுக்கே யல்லாமல் வேறெவருக்கும் கொடுக்கமாட்டான். இறைவன் ஒரு மனிதனே விரும்பி விட்டால் அவனுக்கு இஸ்லாமிய ஆடையை அணிவித்து அதன பாணியிலேயே ஒழுகச் செய்து விடுவான். இநத மாரக்கம பேணுதல், தயாளம் இரணடைக் கொணடும்தான சம்பூரணமடையும்.

நீர் உட்கொள்ளும் உணவை, அது எவ்வகையிலானது என்று நன்கு அலசிப் பார்த்துக்கொள்ளும். உமக்கும், மார்க்கத்தில் தடுக்கப்பட்டதற்கும் மத்தியில இரும்பாலான ஒரு திரையினே—சுவரினே எழுப்பிவிடும். ஏனெனில் ஹராமான வகையில் வளர்கின்ற உடலே மறுமையில் அல்லாஹ் நரகத் தீயால கரித்து விடுவான். "அழிந்தவனேப் பற்றி எப்படி அழிந்தான்? என்று வியக்க எவருக்கும தோனருது. வெற்றி பெற்றவன் எப்படி வெற்றியடைந்தான்? என்று தான வியப்படைவர்."—இப்படி அமரர்கள பேசிக்கொள்வர்.

ஒரு கூட்டத்தார் குழுமி இருந்து ஏதேதோ பேசிக்கொணடிருந்து விட்டுத தொழுகை நேரம் வந்ததும அவர்கள பிரிந்து அவரவரும் தனித்தனியாய் நின்று

தங்கள் தொழுகையை நிறைவேற்றினால், இறைவன் இப்படிச் சொல்லுவான்: ''இப்லீஸே! அவர்களை விட்டு விடாதே! உன்னோடு சேர்த்துக்கொள்! காரணம் அவர்கள் நபி முஹம்மது (ஸல்) வின் மார்க்கத்தை—ஜமாஅத் என்னும் வழி முறையை இலேசுப்படுத்திவிட்டனர்.''

எவர் ''மக்ரிப்'', ''இஷா'' இரு தொழுகைகளுக்கு மத்தியில் உள்ள நேரத்தில் 'நபில'ாக இரண்டு 'ரக்அத்'கள் தொழுவாரோ அவருக்காகச் சுவனத்தில் இறைவன் ஒரு மாளிகை அமைக்கிறான். எவர் தாம் தூங்குமுன்பு ''கஹ்பு'' என்னும் வசனத்தின் கடைசி அத்தியாயமான, ''குல் இன்னமா அன பஷருன் மிஸ்லுகும் யூஹா இலய்ய அன்னமா இலாஹுகும் இலாஹுன் வாஹிதுன் பமன் கான யர்ஜூ லிக்காஅ றப்பிஹி பல் ய:மல் அமலன் சாலிஹன் வலாயுஷ்ரிக் பி இபாதத்தி றப்பிஹி அஹதா.'' என்பதை ஓதிக்கொண்டு படுத்தால் அவரது நெஞ்சில் ஒரு ஜோதி பிரகாசிக்கும். தமக்காகப் பிழை பொறுக்க விழைகின்ற அமரர்களது திரளே அந்த ஜோதியில் தென்படும்.

வெள்ளி இரவில் எவர் ''பக்கரா'' வசனத்தைப் படிப்பாரோ அவருக்காக ஒரு பெரும் பிரகாசம் ஏற்படும். அதில் அண்ட சராசரமும் தென்படும். வானுலக, பூவுலக அமரர்கள் இவருக்காக மன்னிப்புக் கோரிடத் திரண்டிருக்கும் திருக்காட்சியும் தெளிவாகும்.

பள்ளிவாயில் 'முஅஸ்ஸின்' பாங்கு சொல்லும் பொழுது, அவர் சொல்லும் ஒவ்வொரு வார்த்தைகளையும் நீரும் சொல்லும். அப்பொழுது அவருக்குக் கிடைக்கின்ற கூலியின் அளவு உமக்காகவும் எழுதப்படுகிறது.

முன்னவர்களது அறிவு ஞானத்தையும், பின்னவர்களுடைய அறிவாற்றல்களையும் என்னிடம் இறைவன்

நிரப்பிவைத்துள்ளான். இகபரம் என்னும் இரு உலகுக்கும் தேவையான எல்லா காரியங்கள் பற்றியும் உள்ள அவ்விரு சாராரின் அறிவு ஞானத்தை எல்லாம் நான் உமக்குச் செய்கின்ற இந்த 'வசிய்யத்'தில் திரட்டித் தந்துவிட்டேன். எனது இந்த நல்லுரைகளைப் பிறருக்கு உரைக்கின்ற விஷயத்தில் உலோபத்தனம் செய்தல் தகாது. நிச்சயம் இதை எனது சமூகத்தவருக்குப் போதித்துவிடும் எனப்பெருமானார் கூறிவிட்டு இந்த இறை வசனத்தைப் படித்தார்கள்: "வேத நூலிலே நாம் மக்களுக்கு விளக்கிக் காட்டினபின், நாம இறக்கிய பகிரங்கமான ஆதாரங்கள், நேர்வழிகளை எவர்கள் சொல்லாது மறைக்கின்றனரோ அவர்களை இறைவனும் சபிக்கிறான்; சபிப்பவர்களும் சபிக்கின்றார்கள்."

அடுத்து இப்படிச் சொன்னார்கள்: எவர், தமது அறிவை எனது சமூகத்தவர்களிடம் மறைக்கின்றாரோ அவருக்கு நரகத் தீயாலான கடிவாளம் ஒன்றை அல்லாஹ் பூட்டுகிறான்.

பின்னொரு காலம் வரும். அதில் மக்கள் இப்படி இருப்பர்: ஒரு மனிதரை நேரடியாய்ச் சந்திப்பதைவிட அவர் பெயரை மட்டும் கேட்பது நல்லதாகத் தோன்றும். ஒருவரோடு கூடிப்பழகி அனுபவம் பெறுவதைவிட அவரை ஒரு முறை சந்திப்பது மட்டும் சிறந்தது எனலாம். அப்படி நீர் அவருடன கூடிப் பழகி அனுபவம் பெற்றால் அவரிடம் சில பண்பாடுகள் உமக்குத் தென்படும். அகுணங்களைக் கண்டதும் இனி இவரை ஒரு முறையேனும் சந்திக்காதிருக்கவே தீர்மானித்துவிடுவீர். காரணம், அவர்களுடைய மார்க்கமெல்லாம் பணம் திரட்டுவது தான். வயிற்றை வளர்ப்பதே அவர்களது குறி. பெண்ணழகிகளே அவர்களது 'கிப்லா''. இள மங்கையரின் எழில் கண்டு சொக்கிச் சுழலுவர்; போதை

யில் புரளுவர். இவர்கள் முஸ்லிம்களுமல்லர்; கிருஸ்தவர்களுமல்லர். இந்த மனிதர்களின் இதயத்தில் அணுத்துணையும் ''ஈமான்''—நம்பிக்கை இருக்காது; ஆனல் இவர்களைப் பார்த்து 'என்னே இவர்களது அறிவு, அடக்கம், பக்தி!' என்று புகழ் பாடுதற்கு மட்டும் ஆட்கள் குறையாது.—என் செய்ய? அவர்களுக்கும் வயிற்றுப் பிழைப்பு நடக்கவேண்டும் அல்லவா?

•

எனக்குப் பின்னர் சில மக்கள் வருவர். அவர்களுக்கு உதாரணம் சொல்ல வேண்டுமானல் ஒரு மனிதனை ஒப்பிட்டுக் காட்டலாம். இவன் சென்று கொண்டிருக்கிருன். மெலிந்த சில ஆடுகள் ஓடையில் ஓடுகின்ற நீரை வயிறு நிரம்பக் குடித்துவிட்டுத் தொப்பையான வயிற்றுடன் வருகின்றன. அவைகளைக் கண்ணுற்ற இவன் அவைகள் மிகக் கொழுத்திருக்கின்றன என்று நினைக்கிருன். எனவே அவற்றில் ஒவ்வொன்ருய்ப் பிடித்து அறுக்கிருன். இப்பொழுது அவன் காண்பதென்ன? அவைகள் வெறும் எலும்பும் தோலுமாகவே தென்படுகின்றன. இவன் ஆசைப்பட்ட மாமிசம் அங்கில்லை. வியப்பால் புலம்புகிருன்: வெளியில் எவ்வளவு கொழுத்த தோற்றம்! உள்ளேயோ வெற்ருேடு!

•

இம்மனிதன் காணும் நிலைதான், எனக்குப் பின் வரும் மக்கள் நிலையும். அவர்களது புறத்தைப் பார்க்குங்கால் பொலிவுடன் தென்படுவர். அகநிலையோ அழுக்கடைந்து கிடக்கும்.

எனக்குப் பின் சிலர் வருவார்கள்; அவர்களிடையே இருப்பவர்கள் எல்லாம், அநீத மன்னன், பணம் படைத்த உலோபி, உலகாசை பிடித்த அறிஞன், பகட்டும் பக்தன், பொய் சொல்லிப் பிழைப்பவன்,

மோசடி செய்யும் தொழிலாளி, எடுத்ததற்கெல்லாம் சத்தியம் செய்கின்ற வணிகன், சதிநிறைந்த பெண்டிர் இவர்களே.

பின் வரும் காலத்தில் சிலர் தோன்றுவர். பள்ளிகளைப் புதிது புதிதாகக் கட்டுவார்கள். பள்ளிகள் நிரம்பப் பாங்கொலியும், திருமறையும் இருக்கும். ஓத ஆள் இருக்காது. அவர்களது இதயங்கள் நம்பிக்கையில்லாமலாகி விடும். நல்லுபதேசங்கள் பெறமாட்டார்கள். பாபக் கருமங்களில் ஈடுபடுங்கால் இறைவனை எண்ணி வெட்கப்பட மாட்டார்கள். நரகினைக் கண்டு அஞ்சமாட்டார்கள். ஷைத்தான் அவர்களது தலைவனாகுவான். "லாஇலாஹ இல்லல்லாஹு" என்ற மூல மந்திரத்தைவிட உலகம் தான் அவர்களுக்கு இனிக்கும்.

இந்த ரீதியில் இருப்பவர்கள், உங்கள் போன்றோர்களின ஒழுக்கத்தையும், சாத்வீகக் குணத்தையும், துறவறத் தன்மையையும் கண்ணுற்று விட்டால், நிச்சயம் நீங்கள் பைத்தியக்காரர்கள்தாம் என்று ஆணையிட்டுக் கூறி விடுவார்கள். நீங்கள் அவர்களோடு அண்டிப்பழகி உறவு கொண்டு பார்த்தால், நிச்சயம் இவர்களிடம் இறைவனது எச்சரிக்கைகள் பற்றி அணுத்துணையும் நம்பிக்கையில்லை; ஈமானே கொள்ளவில்லை என்று உறுதியாகச் சொல்லி விடுவீர்கள்.

மக்கள் அனைவரும் செத்த சவப் பொருள்கள். ஆனால் கற்றபடி நடக்கின்ற அறிஞர்களைத் தவிர...

பிராணத் தியாகிகளின் இரத்தத்தைவிட அறிஞர்கள் எழுதும் மை அல்லாஹ்விடம் மிக விருப்புக்குரியதாகும். காரணம் அறிஞர்கள் அநேக மக்களுக்கு நேர்வழிகாட்டி நரகினை விட்டுப் பாதுகாக்கின்றனர். பிராணத்தியாகியோ தம்மை மட்டும் நரகை விட்டுக் காத்துக் கொள்ளுகிறார்.

எனக்குப் பின் அறிஞர்கள் இல்லை எனில் மக்களெல்லாம் மடமைப் பைசாசத்தின் பக்கம் மீண்டு விடுவார்கள். சிறுவர்கள் பெரியவர்களிடமிருந்து அறிவை கற்றுக் கொள்ளுதல் என்றில்லாவிட்டால், அறிவு என்பதே இருந்த இடம் தெரியாது மாய்ந்தொழிந்து போய் இருக்கும். எனினும் இறைவன் எனது சமூகத்தவர்களில் ஒரு சிலரைத் தேர்ந்தெடுத்து அவர்களை கலாஞானம் திரட்டு தற்கென்றே நியமித்துவிட்டான். அவர்களே உண்மைத் தலைவர்கள்; வழிகாட்டிகள். அறிவால் சிலரை உயர்த்தி விட்டான். அறியாமையால் பலரைத் தாழ்த்திவிட்டான் அல்லாஹ்!

ஒவ்வொரு நாளும் என் மீது நூறு ''சலவாத்து'' ஓதிக்கொண்டிருப்பவருக்காக நான் மறுமையில் சிபாரிசு பண்ணுவேன. அடிககடி என்னைப் பற்றிக் கூறிக்கொண் டிருப்பவருக்கு நான் தோழனுவேன்.

ஒரு மனிதரிடம் இருக்கின்ற தயாளத்தின் அளவே அவருக்கு மார்க்கத்திலுள்ள பற்றின் அளவாகும்.

உமது எக்கருமங்களிலும் ஒரு உலோபியிடம் ஆலோசனை கேட்காதீர். உம்மைப் பங்கப்படுத்தும் யோசனையைத் தான் அவன் சொல்லுவான்.

ஒரு மனிதன் பாபம் செய்து, அந்த பாபம் அவன் கண்களில் சிறிதெனப்பட்டால் இறைவன் தனது அமரர்களைப் பார்த்து இவ்வாறு சொல்லுகிறுன்: ''தான் செய்கின்ற பாபச் செயலைச் சாதாரணமாகக் கருதின காரணத்தால் எனது அடியானை அழித்து விடுவேன்'' என்று!

ஒரு மனிதன் தான் புரிகின்ற பாபக் கருமத்தால் அவனது இதயத்திலே கரும்புள்ளி ஒன்று உண்டாகிறது.

உங்களுள் மிகுந்த பாபம் செய்வோரே வன்னெஞ்சம் மிக்கவராகின்றார்.

ஒவ்வொரு நாளும் வல்ல நாயன், விசுவாசிகளான மூ:மின்களுடன் இவ்வாறு சம்பாஷிக்கிறான்: மனிதா! நீ முன்னதாக யாதொரு பொருளாகவும் இல்லாதிருந்த நிலையில் உன்னைச் சிருஷ்டித்தேன். பின்னர் உன் மீது சில விதிகளை விதித்தேன்; அதை ஆற்றுகின்ற விஷயத்தில் எங்கே உனது ஓர்மை? உனக்கு உணவளிக்கும் பொறுப்பை நான் ஏற்றேன்; உனது உறுதிப்பாடு எங்கே? உனக்குச் செல்வம் வழங்கினேன்; தக்க நன்றி உணர்வு உன்னிடமிருக்கிறதா? பாபச் செயல் கொண்டு உன்னைச் சோதித்தேன்; அதற்குரிய பிராயச் சித்தம் எங்கே? துன்பத்தால் உன்னை பரீட்சித்தேன்; பொறுமை இருக்கிறதா, என்னை வணங்குதற்கென்றே உனக்கு ஆரோக்கியமளித்தேன்; எனக்காக உன்னிடம் இருக்க வேண்டிய பக்தி விசுவாசம் எங்கே? கொடிய செயல்களை அம்பலப்படுத்தினாய்; என்னை எண்ணி நாணித் தலைகுனியவில்லை. எனக்குப் பணிய வேண்டும் என்று மக்களிடம் போதித்தாய்; ஆனால் உன்னைப் பற்றி நீ மறந்து விட்டாய். நீ உணவு வேண்டும் என்று என்னிடம் வினவு முன்பு உனக்கு உணவீந்தேன். என்னிடம் யாசிக்குமுன்பு வழங்கினேன். நேர் வழி தேடும் முன்பே வழி காண்பித்தேன். எனக்குப் பணி புரிவதற்கென்றே ஆரோக்கியமளித்தேன். எனக்குப் பணியத் தவறி விட்டாய்; நேர்மையாய் நடக்கவில்லை. எனது வேத நூலை உனக்கு உபதேசித்தேன்; உணர்வு பெற்றாய் இல்லை. எனது வசனங்களால் பயமுறுத்தினேன்; அஞ்சினாய் இல்லை. எனது கோபங்களுக்கு ஆளாகிவிட வேண்டாம் என்று தடுத்து நிறுத்தினேன்; நிற்கவில்லை.

வணங்கா முடிமன்னனோ நீ?

"உங்களை எல்லாம் வீணாகவே படைத்தேன் என்றும், நீங்களெல்லாம் என்னளவில் மீளவும் மாட்டீர்கள் என்றும்

எண்ணிக்கொண்டீர்களோ......?"—என்று அறிவுறுத்து கிருன் அல்லாஹ்.

மறுமை நாள் வந்துவிட்டால், இறைவனது தரப்பிலிருந்து அழைக்கும் ஒருவர் இப்படி அழைப்பார்: "ஏகச் சக்கரவர்த்தியாம் சம்ரட்சகனைத் துதி பாடியவர்களே!" என்று. அப்பொழுது "குல்ஹுவல்லாஹு அஹத்" என்னும் வசனத்தை மிகுதமாய்ப் படித்துக் கொண்டிருந்தவர்கள் முதன்மையாய் எழுந்து வருவர். உடனே, விசாரணை இல்லாது சுவனம் புகச் செய்ய ஆணை பிறப்பிப்பான் அல்லாஹ்.—அவ்வாறே நடக்கும். என்று பெருமானார் அவர்கள் உரைத்துவிட்டுப் பின்வருமாறு பிரார்த்தித்தார்கள்: "ஏக வல்லவா! இந்த வசனத்தின் பொருட்டால் ஓர்மைப் படுத்துபவர்கள் குழாமிலே எங்களையும் சோத்துவிடு! இவ்வசனத்தைப் படிப்பவர்கள் பொருட்டால் எங்களுக்குச் சுவனம் செல்லும் வழியினை இலகுவாக்கியருள்! இந்த வசனம் எங்கள் நாவுகளில் புரண்டு கொண்டிருக்கும் போதே எங்கள் வாழ்நாளை முடித்தருள்! மேலும் இதன் பொருட்டால் எங்கள் கடைசி வாக்கியம் "லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுற்-றசூலுல்லாஹ்" என்று இருக்க அருள் செய்!"

"இந்த நல்லுரையில் முன்னவர்கள் பின்னவர்களாகிய இரு சாராரின அறிவு ஞானங்களும் செறிந்து கிடக்கின்றன. இதன்படி நடந்து கொள்ளும்! இது உமக்குப் போதிய திருப்தியை அளிக்க வலலது"—என்று திரு நபி அவர்கள் அரும்பெரும் கருத்துக்களை அபூஹுறைருவுக்கு நவின்றருளினர்கள்.

இப்பேருரைகளை அபூஹுறைரு அவர்களிடமிருந்து "இமாம் ஹஸனுல் பசரீ" என்பார் பயின்றார்கள். இவர்களிடமிருந்து "குராசானி" அவர்கள் இதைக் கற்று முடித்தபொழுது தமது குருவிடம் இப்படிப் பிரமாணம் செய்து கொடுத்தார்கள்: "இதற்குப் பின்னர் கல்வி என்று வேறு ஒன்றை நான் தேடமாட்டேன்; இது சத்தியம்?"